# பொதிகை வாசகம்

## முதற் படிவம்—இரண்டாம் பிரிவு

ஆசிரியர்கள் :
வித்துவான் க. முருகேச முதலியார்
தலைமைத் தமிழாசிரியர்,
போர்டு உயர்நிலைப்பள்ளி, அரியலூர்

வித்துவான் அ. க. நவநீதகிருஷ்ணன்
தமிழாசிரியர்,
மந்திரமூர்த்தி உயர்நிலைப்பள்ளி, திருநெல்வேலி

திருத்திப் பதிப்பித்தவர் :
பண்டித வித்வான்
லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்
தமிழ்ப் பேராசிரியர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலைநகர்.

வெள்ளையன் பதிப்புக் கழகம்
கண்டனூர், இராமநாதபுர மாவட்டம்

 [விலை அணா 12

முதற்பதிப்பு—நவம்பர், 1951
திருத்திய பதிப்பு—நவம்பர் 1953




## நன்றியறிவிப்பு

இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ள செய்யுட் பகுதிகள் சிலவற்றைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை அளித்த அறிஞர்க்கு எங்கள் நன்றியுரியது.

1. தொழில் (8-வரிகள்)—சி. சுப்பிரமணிய பாரதியார் பாடல் —சென்னை அரசாங்கத்தார்.

2. எண்ணமும் பலனும் (10-வரிகள்)—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள், நாகர்கோவில்.

வெள்ளையன் பதிப்புக் கழகம்

Kabeer Printing Works, Madras (2369)

# முகவுரை

பொதிகை வாசகம் என்னும் பெயருடைய இந் நூல் வரிசை, அரசாங்கக் கல்வித் துறையினர் அண்மையில் வெளியிட்ட பாடத் திட்டப்படி எழுதப் பட்டுள்ளது. இத் திட்டத்திற்கிணங்க முதற் பிரிவு நூல் நான்கு பிரிவேளைகளுக்கு உரியதாகவும், இரண்டாம் பிரிவு நூல் முதற் பிரிவினும் சற்று உயர்ந்த தமிழ் நடையுடன் மூன்று பிரிவேளைகளுக்கு உரியதாகவும் எழுதப் பெற்றுள்ளது.

இந்நூலில் உரைநடைப் பாடங்கள் 40 பக்கங்கள் இருத்தல் வேண்டும் என்பது கல்வித்துறையினர் வெளியிட்ட புதிய திட்டத்தின் விதி. இந்நூல் அத் திட்டத்திற் கிணங்க, மாணவர்கள் சுவைத்துப் படித் தற்குரிய பாடங்கள், தக்க பயிற்சிகள், வினுக்கள், இலக்கணக் குறிப்புக்கள் முதலியவை உடையதாக எழுதப்பட்டுள்ளது.

மேற்சொன்ன புதிய திட்டப்படி, செய்யுட் பகுதி யில் 75 வரிகள் இருத்தல் வேண்டும். ஆயின், இந் நூலில் ஆசிரியர் தேர்ந்தெடுத்துக் கற்பிக்கத் தக்கபடி சில வரிகள் மிகுதியாகத் தரப்பட்டுள்ளன.

சிறப்பாக, மாணவர்களின் தமிழறிவை வளர்க் கும் கருத்துடன் இந்நூல் எழுதப்பட்டிருப்பதால், இஃது மாணவர் உலகிற்குத் தக்க பலனை அளிக்கும் என்று நம்புகிறேம்; ஆசிரியருலகம் இதற்கு நல்லா தரவு நல்குமாறு வேண்டுகிறேம்.

ஆசிரியர்கள்

# பொருளடக்கம்

# பொதிகை வாசகம்

## முதற் படிவம்—இரண்டாம் பிரிவு

### 1. தமிழகம்

1. நாம் பேசும் மொழி தமிழ்; அது நம் தாய் மொழி. தமிழ் மொழி வழங்கிவரும் நிலப்பரப்பே தமிழகம் எனவும் தமிழ்நாடு எனவும் வழங்கப் படுகிறது. தமிழகம் நம் தாய்நாடு. தொல்காப்பியம் முதலிய சிறந்த தமிழ் நூல்களில் தமிழகத்திற்கு எல்லை வரையறுக்கப்பட்டிருக்கிறது. தமிழகத்தின் வடக்கு எல்லை திருவேங்கடம் என்னும் திருப்பதி மலை; தெற்கு எல்லை கன்னியாகுமரி; கிழக்கு எல்லை வங்கக் கடல்; மேற்கு எல்லை அரபிக்கடல். இத்தமிழ் நாடு இயற்கை வளங்களால் எழிலுற்றது. மலை, காடு, வயல், கடல் என்னும் நால்வகை வளத்தானும் நலம் பெற்றது.

2. இங்ஙனம் பல துறைகளிலும் சிறப்புற்ற தமிழகம் முப்பெரும் பிரிவுகளாகப் பிரிந்து, சேரநாடு, சோழநாடு, பாண்டிய நாடு என்னும் பெயர்களுடன் விளங்கியது. இந்நாடுகளை ஆண்ட மன்னர்கள் முறையே சேரர், சோழர், பாண்டியர் எனவும், முடியுடை மூவேந்தர் எனவும் வழங்கப்பட்டனர். இவர்களுக்கு உட்பட்டுச் சிற்றரசர்களால் பல சிறு நிலப் பகுதிகள் ஆளப்பட்டன. முடியுடை மூவேந்தர்களும் குறுநில மன்னர்களும் கல்வி, அறிவு, அருள்,


சங்க காலத் தமிழகம்
வேங்கடம்
காஞ்சீபுரம்
தொண்டை நாடு
தென்பெண்ணை
காவிரி
சோழ நாடு
காவிரிப் பூம்பட்டினம்
நாகப்பட்டினம்
உறையூர்
தொண்டி
வஞ்சி
முசிறி
சேர நாடு
வைகை
மதுரை
பாண்டி நாடு
கொற்கை
குமரிமுனை
இலங்கை
அரபிக் கடல்
வங்கக் கடல்
இந்தியப் பெருங்கடல்.

வீரம், கொடை, ஆட்சி ஆகிய அனைத்தினும் மிகவும் உயர்ந்து விளங்கினர்.

3. சேர நாடு என்பது திருவாங்கூர், கொச்சி நாடுகளையும், மலையாள மாவட்டத்தையும் தன்னகத்தே கொண்டதாகும். அது இன்று கேரள நாடு என்னும் பெயரால் வழங்கப்படுகிறது. சேரநாட்டில் மலை வளமும், காட்டு வளமும் நிறைந்துள்ளன. பெரியாறு, சிற்றாறு முதலிய ஆறுகள் அந்நாட்டை வளப்படுத்துகின்றன. சேரநாட்டுக் காடுகளில் யானைகள் மிகுதியாக உண்டு. தேன், தந்தம், தேக்கு, அகில், சந்தனம் முதலியவைகளும் அங்கு மிகுதியாகக் கிடைக்கின்றன.

4. சேரநாட்டின் தலைநகர் வஞ்சி நகரமாகும். தொண்டி, முசிறி என்பவை அதன் சிறந்த துறைமுகங்களாக விளங்கின. சேர நாடு இத்துறைமுகங்கள் மூலமாகக் கடல் வாணிகத்தை நடத்தி வந்தது. சேரநாட்டு மன்னர்களுள் சேரன் செங்குட்டுவன் புகழ் மிக்கவன். இவன் இளவலான இளங்கோ அடிகள் சிலப்பதிகாரம் என்னும் சிறந்த நூலை இயற்றினர். இவர்கள் காலம் ஏறத்தாழக் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு என்னலாம். சேர மன்னர் பனைமாலையைத் தம் அடையாள மாலையாகக் கொண்டனர். விற் கொடி சேரர்களுக்கு உரியது.

5. சோழநாடு என்பது தஞ்சாவூர் திருச்சிராப்பள்ளி மாவட்டங்களையும், தென் ஆர்க்காடு மாவட்டத்தின் ஒரு பகுதியையும் கொண்டது. சோழநாட்டில் வளம் மிக்க வயல்கள் மிகுதி. வற்றாத பெருக்குடைய காவிரியாறு பாயப்பெறுவதால் இது காவிரிநாடு எனப் பெயர் பெற்றது.

6. இச் சோழ நாடு தமிழகத்தின் கீழ்க்கடற் கரையில் அமைந்ததாகலின், கடல் வாணிகத்தில் பங்கு கொண்டிருந்தது. சோழநாட்டார் கடல் வாணிகம், தரை வாணிகம், உழவு கைத்தொழில் ஆகியவற்றுடன் கல்வி, அறிவு, ஒழுக்கம், கலை முதலியவற்றில் சிறந்து விளங்கினர். சோழநாட்டிற்கு **உறையூர், பூம்புகார்,** என்பன சங்க காலத்தில் தலைநகரங்களாக விளங்கின. இந்நாட்டின் சிறந்த துறைமுகப் பட்டினங்களாகச் சங்ககாலத்தில் **காவிரிப்பூம் பட்டினமும்**, பிற்காலத் தில் **நாகப்பட்டினமும்** விளங்கின. சோழ மன்னர் கிள்ளி, செம்பியன், வளவன், சென்னி என்னும் பெயர்களால் குறிக்கப்பட்டனர். ஆத்திப்பூமாலையும், புலிக்கொடியும் சோழர்க்கு உரியவை. ஏறத்தாழ 1800 ஆண்டுகளுக்கு முன் இருந்த சோழமன்னருள் கரிகாலனும், பிற்காலச் சோழருள் இராசராசன், இராசேந்திரன் என்பவரும் குறிப்பிடத்தக்கவராவர்.

7. **பாண்டிய நாடு** என்பது இன்றைய மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங் களைத் தன்னகத்தே கொண்டது. வையை, பொருநை என்னும் இரண்டு ஆறுகள் பாய்ந்து இந்நாட்டை வளப்படுத்துகின்றன. சிலப்பதிகார காலத்தில் கொற்கை என்பது பாண்டிய நாட்டுத் துறைமுக நகரம். **மதுரைமாநகர்** தலைநகராக இருந்தது. கொற்கைத் துறைமுகம் முத்தெடுக்கும் தொழிலிற் சிறந்தது. இந்நாட்டில் புகழ்பெற்ற **பொதிகைமலை** இருக்கிறது. இந்நாடு கல்வியிலும், வாணிகத்திலும், உழவிலும், கைத்தொழிலிலும், கலை வளர்ச்சியிலும் சிறப்புற்று விளங்கியது.

8. பாண்டியர்க்கு வேப்பம்பூ மாலையும், மீன் கொடியும் உரியவை. பாண்டியர் சங்கம் அமைத்

துத் தமிழை வளர்த்த தனிப்பெருமை உடையவர். இவர்கள் நடத்திவந்த தமிழ்ச் சங்கத்தில், தமிழ்ப்புலவர் பலர் இருந்து தமிழாராய்ந்து நூல்கள் பலவற்றை வெளிப்படுத்தினர். அவற்றுள் பல அழிந்தன. எஞ்சி இருப்பவையே இக்காலத்தில் உள்ள தொல்காப்பியம், புறநானூறு முதலியவை. இவை **சங்க நூல்கள்** எனப் பெயர் பெறும். சங்க காலத்தின் கீழ் எல்லை ஏறத்தாழக் கி. பி. 300 என்னலாம்.

9. தமிழகத்து மூவேந்தரும், குறுநில மன்னரும், குடிமக்களைத் தம் உயிரெனப் பாதுகாத்தனர்; மக்கள் நலனே தம் நலன் எனக் கொண்டு உயிர் வாழ்ந்தனர்; தமிழ்ப் புலவர்களைப் பாதுகாத்துத் தமிழை வளர்த்தனர்; தமிழரின் வீரம், நாகரிகம், திறமை, அறிவு, ஆற்றல் முதலியவற்றை உலகறியச் செய்தனர். இவர்கள் காலத்துத் தமிழகம் மிகச் சிறந்து விளங்கியது. இவர்கள் வழிவந்த நாமும் நம் செயல்களால் நமது நாட்டை மேம்படச் செய்வோமாக!

## அருஞ்சொற்பொருள்

எழில் - அழகு. தன்னகத்தே - தன்னுள்ளே. இளவல் - தம்பி. எஞ்சி - மிகுந்து. பொருநை - தாமிரவருணி.

## வினாக்கள்

விடை தருக :—

1. தமிழகம் என்ற பெயர் எக்காரணத்தால் வந்தது?
2. தமிழகத்தின் எல்லைகள் எவை?
3. சேரநாடு எது?
4. சோழ நாட்டின் சிறப்பு யாது?

5. சோழ நாட்டின் தலைநகரும், துறைமுக நகரங்களும் எவை ?

6. சோழருட் சிறந்தோர் யாவர் ?

7. சோழரின் வேறு பெயர்கள், அடையாள மாலை, கொடி எவை ?

8. பாண்டியரின் தனிப் பெருமைக்குரியது யாது ?

9. தமிழ் மன்னரின் இயல்புகள் யாவை ?

### பயிற்சி

1. பொருள் கூறுக:—வேங்கடம், எஞ்சி, கொடை, ஆற்றல்.

2. வாக்கியங்களில் அமைக்க :—அழகுபட, ஒன்றன் பின் ஒன்றாக, தனித்தனி, தனிப்பெருமை, வளப்படுத்த, வற்றாத.

### இலக்கணம்

**1. வாக்கியம்**

தமிழ்மொழி வழங்கும் நிலப்பரப்புத்தமிழகம் எனப்படுகிறது.—இவ்வாறு பொருள் விளங்குமாறு சொற்கள் தொடர்ந்து, கருத்து முடிந்து நிற்பது **வாக்கியம்** அல்லது **முற்றுச் சொற்றொடர்** எனப்படும்.

தமிழ்மொழி வழங்கும் நிலப்பரப்பு—இத்தொடர் பல சொற்கள் தொடர்ந்து பொருள் தரக்கூடியவாறு இருப்பினும், முடிவான கருத்தைத் தரவில்லை. இது **எச்சச் சொற்றொடர்** எனப்படும்.

(1) தமிழ்நாடு இயற்கை வளங்களால் அழகுடையது.—இது ஒரு செய்தியைக் குறிப்பதால் **செய்தி வாக்கியம்** எனப்படும்.

(2) நான் கூறுவதைக் கேள்.—இது கட்டளைப் பொருளில் வந்தது. இதற்குக் **கட்டளை வாக்கியம்** என்பது பெயர்.

(3) மதுரை பாண்டியனுக்கு உரியதா ?—இது கேள்விப் பொருளில் வருவதால், இதற்கு **வினா வாக்கியம்** என்பது பெயர்.

(4) சோழனின் வீரந்தான் என்னே !—இது மன உணர்ச்சியை வெளிப்படுத்துவதால் உணர்ச்சி வாக்கியம் எனப்படும்.

இவ்வாறு முற்று வாக்கியங்கள் நான்கு வகைப்படும். *

2. வாக்கியமாக்குக :

(1) முத்து பாண்டிய நாட்டின்
(2) சோழநாடு கடல் வாணிகத்தில்
(3) வளம் மிக்க வயல்கள் சேர நாட்டில்
(4) தமிழகம் வடக்கும் மேற்கும்

---

* ஆசிரியர்க்குக் குறிப்பு :—

இந்நூலில் இலக்கணச் செய்திகள் சிலவே மாதிரியாகக் காட்டப்பட்டுள்ளன. இம்முறையில் இவ் வகுப்புக்குரிய பிற இலக்கணச் செய்திகளையும் இப்பாடங்களை நடத்தும்பொழுதே பிள்ளைகளுக்குக் கற்பித்தல் நலம்.

# 2. மின்சாரமும் அதன் பயன்களும்

1. உலகத்தின் உயிர்நாடியாக விளங்குவது மின்சாரம். மின்சாரம் என்பது மின்னலின் சத்து என்றே பொருள்படும். காற்று எவ்வாறு மக்கள் வாழ இன்றியமையாத பொருளாக அமைந்துள்ளதோ, அதே போன்று மின்சாரமும் மனித வாழ்க்கைக்கு மிக இன்றியமையாத பொருளாக அமைந்துள்ளது. மின்சாரம் காற்றைப் போன்று கண்ணுக்குத் தெரியாமல் எங்கும் பரவி நிறைந்துள்ளது. நாம் காற்றை அதன் செயல்களைக் கொண்டு அறிவதுபோல, மின்சாரத்தையும் அதன் செயல்களைக் கொண்டு அறிதல் கூடும்.

2. மின்சாரம், மக்களால் அவரவர் அறிவாற்றல்களுக்கேற்ப எண்ணிறந்த தொழில்களுக்குப் பயன்படுத்தப்படுகின்றது. நீராவி கொண்டு நடத்தப்பட்டுவந்த வேலைகள் பல இப்போது மின்சார சக்தி கொண்டு நடத்தப்பட்டுவருகின்றன. மின்சாரத்தில் சூடும், ஒளியும், விரைவும் ஒருங்கே அடங்கிக் கிடக்கின்றன. இதனைத் தொழில் முறையில் பயன்படுத்துகையில் அவை வெளிப்படுகின்றன. மின்சாரத்தைப் பயன்படுத்தும் வகைக்கேற்பச் சூடும், ஒளியும், விரைவும் உண்டாகின்றன.

3. மின்சாரம் நிலைத்திருக்கையில் தேக்க மின்சாரம் (Static Electricity) எனவும், விரைவு காட்டி ஓடுகையில் **ஓடும் மின்சாரம்** (Current Electricity) எனவும் வழங்கப்படுகின்றது. மின்சார ஆற்றல் இருவகையாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இவற்றுள் ஒன்று **நேர் மின்சாரம்** (Positive




மின்சாரத்தால் விளைந்துள்ள நலன்கள்

Electricity) என்றும், மற்ருென்று **எதிர் மின்சாரம்** (Negative Electricity) என்றும் பெயர் பெற்றிருக்கின்றன. இவற்றுள் நேர் மின்சாரம் நேர் மின்சாரத்தோடு இயைபு கொள்ளாது. அவ்வாறே எதிர் மின்சாரம் எதிர் மின்சாரத்தோடு உறவாடாது. எனவே, நேர் மின்சாரம் எதிர் மின்சாரத்துடன் இயைந்து உறவு கொள்ளும்போதுதான் மின்சார ஆற்றல் வெளிப்படுகின்றது.

4. ஓடும் மின்சாரத்தால்தான் இன்று மக்களினம் பெரும்பயன் அடைந்து வருகின்றது. இதனுல் பல வேலைகளைச் செய்ய முடியும் என்பதைக் கண்டுபிடித்தவர்களுள் **மார்ஸ், தாமஸ் ஆல்வா எடிசன், மைக்கேல் பாரடே, மார்க்கோனி** போன்றவர்களை உலகம் என்றும் மறக்க முடியாது. இவர்கள் முயற்சியால் மக்கள் மின்சாரத்தை எண்ணற்ற துறைகளில் பயன்படுத்திக்கொள்ளுகின்றனர். ஒளி மிக்க விளக்குகள், சமைக்கும் அடுப்புகள், அழுக்குத் துணிகளை வெளுக்கும் சாதனம், விசிறி, குளிர்காலத்தில் வெப்பத்தையும் கோடைக் காலத்தில் குளிர்ச்சியையும் தரும் கருவி, உணவுப் பண்டங்களையும் காய்கறிகளையும் பழங்களையுய் பலநாள் கெடாமல் வைத்திருக்கும் சாதனம், எந்த நேரத்திலும் குளிர்த்த பானங்களை வழங்கும் சாதனம் முதலியவை மக்களின் வீட்டு வாழ்க்கையில் பயன்படத் தக்கவாறு மின்சாரத்தால் கிடைத்திருக்கின்றன.

5. இவை தவிர, மின்சாரம் உலகம் முழுவதிலும் மக்களினத்திற்கு இன்றியமையாப் பெருந்தொண்டாற்றி வருகிறது. மின்சார ஆற்றல் கொண்டு 1843-ஆம் ஆண்டில் மார்ஸ் என்பவர் கண்டுபிடித்த

தந்தி முறை இன்று மக்களுக்குப் பயன்படும் அளவை நாம் வரம்பிட்டுக் கூற முடியாதன்றோ! செய்திகளை விரைவில் அனுப்பும் இத்தந்தி முறை மின்சாரத்தால் ஏற்பட்ட பயனே அன்றோ! ஆனால், தந்தி முறைக்குக் கம்பிகள் தேவை. கம்பிகளை நெடுக இணைத்து, இக் கம்பிகளின் மூலந்தான் மின்சார ஆற்றலைக் கொண்டு செய்திகள் அனுப்பப்படுகின்றன. இதற்காக உலகம் முழுவதும் கம்பிகளால் இணைக்கப்பட்டுளது. நிலத்தில் பெரிய கம்பங்கள் நட்டு அவற்றின் மூலகமாகக் கம்பிகள் பல ஆயிரம் கல் தொலையையும் இணைத்துள்ளன. அவ்வாறே கடலடியிலும் நிலத்தடியிலும் பெரிய கம்பிகளைப் புதைத்து அவற்றின் மூலம் கடல் கடந்த நாடுகளுக்கும் தந்தி யனுப்ப வசதி செய்யப்பட்டிருக்கிறது.

6. இவ்வாறு கம்பிகள் மூலம் செய்தியனுப்புவதைவிடக் கம்பிகள் இல்லாமலே உலகின் எப்பகுதிக்கும் செய்தியனுப்பும் கம்பியில்லாத் தந்தி முறையை மார்க்கோனி என்பார் கண்டுபிடித்தார். இதனால் கப்பலிலோ, வான ஊர்தியிலோ, புகைவண்டியிலோ சென்றுகொண்டிருந்தாலும் நாம் விரும்பிய இடத்திற்குச் செய்தியனுப்ப முடிகிறது. கப்பலுக்கோ, விமானத்துக்கோ இடுக்கண் நேரிட்டால், உடனே அதனை அறிந்து உதவமுடிகிறது. கம்பியில் அனுப்பும் தந்திச் செய்தியைப் போல, கம்பி மூலம் நேருக்கு நேராகப் பேசும் டெலிபோன் முறையும் மின்சாரத்தின் வாயிலாகக் கிடைத்த வசதியேயாகும். டெலிபோன் வாயிலாக இங்கிருந்து இங்கிலாந்தில் இருப்பவர்களுடனும் பேசலாம்.

7. வானொலி எனப்படும் சாதனம், ஓரிடத்தில் பேசுவதையும் பாடுவதையும் உலகில் எங்கிருந்தும்

கேட்க வசதி அளித்திருக்கிறது. இந்த வானொலி மின் சாரத்தால்தான் இயங்குகிறது. வானொலியால் மக் களுக்கு உண்டாகும் நன்மைகள் எண்ணிறந்தவை. இப்போது, மின்சார ஆற்றல் மூலம் இன்னும் ஓர் அரிய சாதனம் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. 'டெலி விஷன்' என்பது இதன் பெயர். இதனால் நார்வேயில் ஒருவர் பேசுவதையோ பாடுவதையோ இங்குள்ள நாம் கேட்க முடிவதுடன், பேசுபவரையோ, பாடு பவரையோ காணவும் முடியும். மின்சாரத்தால் மனித உடலுக்குள் இருப்பவற்றைப் படம் பிடிக்கவும் இயலு கின்றது. பல பிணிகளைப் போக்கும் ஆற்றலும் மின் சாரத்துக்கு இருக்கிறது.

8. மின்சார ஆற்றல் கொண்டு டிராம் வண்டி களும் இரயில் வண்டிகளும் ஓட்டப்படுகின்றன. மின்சாரத்தின் உதவியால் பஞ்சாலைகள், கரும்பாலை கள், சணல் ஆலைகள் போன்றவைகளும், தொழிற் சாலைகளும் நடைபெறுகின்றன. வேளாண்மை யிலும் இன்று மின்சாரம் பயன்படுகிறது. நீர் இறைக்கும் வேலை மின்சாரத்தின் உதவியால் மிக எளிதில் விரைவாக முடிகிறது. நிலக்கரி, உலோகங் கள் ஆகியவற்றின் சுரங்கங்களிலும், மண்ணெண் ணெய்க் கிணறுகளிலும் மின்சாரம் பெரிதும் பயன் படுகின்றது. இக்காலத்தில் மின்சாரம் இன்னின்ன வேலைக்குத்தான் பயன்படுகிறதென வரையறுத்துக் கூறமுடியாதபடி, எல்லா வேலைகளுக்கும் பயன் படுகின்றது.

அருஞ்சொற்பொருள்

அறிவாற்றல் - அறிவும் திறமையும். எண்ணிறந்த - அள வில்லாத. இயைபு - கலப்பு, இணைப்பு. வரம்பு - எல்லை. இடுக் கண் - துன்பம்.

## வினுக்கள்

விடை தருக :—

1. மின்சாரம் என்பது யாது ?
2. மின்சாரத்தில் அடங்கியிருப்பவை எவை ?
3. மின்சாரம் எத்தனை வகைப்படும் ?
4. மின்சார ஆற்றல் எங்ஙனம் வெளிப்படுகிறது ?
5. மின்சாரத்தால் பல வேலைகளைச் செய்யமுடியும் என்பதைக் கண்டுபிடித்தவர்கள் யாவர் ?
6. மின்சாரம் வீட்டு வாழ்க்கையில் எவ்வெவ்வாறு பயன் படுகிறது ?
7. மின்சாரத்தால் உலகம் பெற்றுள்ள அரிய சாதனங்கள் யாவை ?
8. மின்சாரம் வேளாண்மையில் எவ்வாறு பயன்படுகிறது ?

## பயிற்சி

1. குறிப்பு வரைக :—மின்சார வகை, மார்ஸ், தந்தி, கம்பியில்லாத் தந்தி, டெலிபோன், டெலிவிஷன், வானொலி, தொழில் மின்சாரம்.

2. சொந்த வாக்கியங்களில் பயன்படுத்துக :—அமைந் துள்ளது, எண்ணிறந்த, அறிவாற்றல், வகைக்கேற்ப, இயைபு, மறக்கமுடியாது, வீட்டு வாழ்க்கை, இணைக்கப்பட்டு, கடல் கடந்த, இடுக்கண், வாயிலாக.

3. சக்தி, ஆற்றல்—இவை ஒரே பொருளைத் தருவன. உறைதல், வசித்தல்—இவையும் ஒரே பொருளில் வருபவை. ஆற்றல் - தமிழ்ப்பெயர் ; சக்தி - வடமொழிப்பெயர். இவ்வாறு வருவனவற்றைக் கவனியுங்கள்.

## இலக்கணம்

(1) மின்சாரம் எங்கும் உள்ளது.
(2) மக்கள் இதனைப் பயன்படுத்துகின்றனர்.

1. இவ்வாக்கியங்களில் 'உள்ளது', 'பயன்படுத்துகின்றனர்' என்பவை முடிக்கும் சொற்கள். இவையின்றி வாக்கியங்கள் முடிவு பெறா. இவ்வாறு முடிக்கும் சொல்லே வாக்கியத்தில் பயன் நிலைத்திருக்கும் இடமாகையால் இதற்குப் பயனிலை என்பது பெயர்.

2. 'மின்சாரம் எங்கும் உள்ளது'.—உள்ளது என்பது பயனிலை. எது உள்ளது?—மின்சாரம். இவ்வாக்கியம் தோன்ற முக்கிய இடமாயிருந்தது மின்சாரம். எனவே, மின்சாரம் என்பது எழுவாய். வாக்கியம் எழுவதற்கு வாயாக (இடமாக) இருப்பது எழுவாய்.

3. மக்கள் மின்சாரத்தைப் பயன்படுத்துகின்றனர்.—இதில் பயன்படுத்துகின்றனர் என்பது பயனிலை. யார் பயன்படுத்து கின்றனர்?—மக்கள். எதைப் பயன் படுத்துகின்றனர்?—மின் சாரத்தை—இது செயப்படுபொருள் ஆகும். எனவே, மக்கள் என்பது எழுவாய். எழுவாய் செய்யும் தொழிலின் பயனை அடையும் பொருள் செயப்படுபொருள் எனப்படும்.

4. எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் என்பன வாக்கியத்தின் உறுப்புக்கள். எல்லா வாக்கியங்களிலும் செயப்படு பொருள் இருத்தல் வேண்டும் என்பதில்லை. செயப்படுபொருள் இன்றியும் வாக்கியம் வரும். ஆனல் எழுவாயும் பயனிலையும் இன்றி வாக்கியம் அமையாது.

5. எ. ப. செ. கூறுக :—

(1) அடுப்பு மின்சாரத்தால் எரிகிறது.
(2) மின்சாரம் பண்டங்களைக் காக்கிறது.
(3) பிராங்க்ளின் முதலில் மின்சாரத்தைக் கண்டார்.

# 3. வீர பத்தினி

1. ஐம்பெரும் காப்பியங்களுள் ஒன்ருகிய சிலப் பதிகாரம் விரித்துரைக்கும் செய்தியே கண்ணகியின் வரலாறு. கண்ணகியின் சிலம்பு காரணமாக எழுந்த கதை ஆதலால் சிலப்பதிகாரம் என்னும் பெயர் இந் நூலுக்கு இடப்பட்டது.

2. சிலப்பதிகார காலத்தில், ஏறக்குறைய ஆயி ரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர், சேர நாட்டைச் செங்குட்டுவனும், சோழநாட்டைக் கரி காலன் வழிவந்த சோழனும், பாண்டியநாட்டை நெடுஞ்செழியனும் ஆண்டு வந்தனர்.

3. அக்காலத்தில் சோழ நாட்டின் தலைநகரான பூம்புகாரில் கோவலன் என்னும் வணிகர் பெருமகன் வாழ்ந்து வந்தான். அவன் மனைவியின் பெயர் கண் ணகி. அவளோடு சில காலம் கோவலன் இனிமை யாக வாழ்ந்தான். பிறகு அவளை விட்டுப் பிரிந்து மாதவி என்னும் நடன மாதுடன் வாழத் தொடங் கினான். மாதவி நடனத்தில் வல்லவள். கோவலன் அவளுக்குப் பெரும் பொருள் அளித்தான்; நாளடை வில் தன் செல்வம் முழுவதையும் இழந்து வாட்ட முற்ருன். அந்நிலையிலும் கண்ணகி அவனை உள்ளன் போடு நேசித்தாள்; தன் காற்சிலம்பு ஒன்றை மதுரை யில் விற்று, வரும் பொருளைக் கொண்டு மதுரை யிலேயே தங்கி வாணிகம் புரிய விரும்பிய கணவன் கருத்துக்கு இசைந்தாள்; ஒருவருக்கும் அறிவியாமல் நடு இரவில் தன் கணவனுடன் பூம்புகாரை விட்டுப் புறப்பட்டு மதுரை நோக்கி நடந்தாள்.

4. மதுரை நோக்கி நடந்து சென்ற கோவல னும் கண்ணகியும் வழியில் சமணப் பள்ளி ஒன்றில் இருந்த கவுந்தியடிகள் என்னும் பெண் துறவியைக்

கண்டு வணங்கினர். அவ்வடிகளும் அவர்களுடன் மதுரை செல்லப் புறப்பட்டார். மூவரும் பல நாட்கள் வழி நடந்து மதுரை மாநகரத்தை அடைந்தனர்; மதுரை மாநகரின் கீழ்த்திசை வாயிலில் இருந்த அருக முனிவர் இருக்கையில் தங்கினர். அன்றே கோவலன் தனித்துச் சென்று மதுரை மாநகரின் வளங்களைக் கண்டு திரும்பினன்.

5. கவுந்தியடிகள், மதுரையில் தமக்குத் தெரிந்த மாதரி என்ற இடைக்குல மடந்தையிடம் கோவலனையும் கண்ணகியையும் அடைக்கலமாக ஒப்புவித்தார். மாதரி இருவரையும் அழைத்துச் சென்று, தன் இல்லத்தின் அருகில் இருந்த சிறு வீட்டில் இருக்கச் செய்தாள்; உண்டி சமைக்க வேண்டும் பொருள்களைக் கொடுத்து உதவினள்; தன் மகள் ஐயை என்பாளைக் கண்ணகிக்குத் துணையிருக்க அனுப்பினள்.

6. கண்ணகி, மாதரிக்கு நன்றி கூறினள்; உண்டி சமைத்தாள்; கோவலனுக்கு இட்டாள்; உண்டியுண்ட கோவலன் அவளுடைய நல்லியல்பு களை யெல்லாம் பாராட்டினன்; தான் அவளுக்குச் செய்த தவற்றைக் கூறி வருந்தினன்; இறுதியில் அவளிடம் அன்போடு விடைபெற்றுச் சிலம்பை விற்றுவர மதுரை மாநகருள் சென்றான்.

7. சிலம்பை எங்கு விற்பது என்னும் எண்ணத்துடன் கோவலன் கடைவீதியில் செல்லும்போது, அரண்மனைப் பொற்கொல்லனைக் கண்டான்; அவனிடம் தன் சிலம்பைக் காட்டித் தன் கருத்தை எடுத்து உரைத்தான். சிலம்பைக் கண்ட அப்பொற் கொல்லன் மனம் மகிழ்ந்தான். அவன் பாண்டி மாதேவியின் சிலம்பொன்றைக் கவர்ந்தவன். அக்களவைப் பிறர்

அறிவதற்கு முன் கோவலனைக் கள்வனுக்கித் தான் தப்ப அவன் முடிவு செய்தான்.

8. அதனால் அவன் கோவலனைப் பார்த்து, "ஐயா, இச்சிலம்பு எம் அரசியார் அணிதற்கே ஏற்றது; இதனை அரசருக்குக் காட்டி வரும்வரை என் வீட்டின் புறத்தே அமர்ந்திரும்," என்று கூறினான். பொற்கொல்லனின் வஞ்சகத்தை உணராத கோவலன் அதற்கு உடன்பட்டான்.

9. பொற்கொல்லன் விரைந்து அரண்மனையை அடைந்தான். அவ்வமயம் பாண்டியன் விரைவாக அந்தப்புரம் நோக்கிச் சென்றுகொண்டிருந்தான். பொற்கொல்லன் அரசனைப் பணிந்து, "அரசே, தங்கள் தேவியின் சிலம்பைக் கவர்ந்த கள்வன், சிலம்புடன் என் வீட்டுப் புறத்தே இருக்கிறான்," எனக் கூறினான். மன்னன் உண்மையை ஆராயாது காவலரை அழைத்து, "நீங்கள் இப்பொற்கொல்லனுடன் சென்று இவன் காட்டும் மனிதனிடம் சிலம்பு இருந்தால், அவனைக் கொன்று சிலம்பைக் கொண்டு வருக," என்று கூறினான்.

10. காவலர் பொற்கொல்லனுடன் சென்று கோவலனைக் கண்டனர்; களங்கமற்ற அவன் முகத்தைக் கண்டு அவனைக் கொல்லத் தயங்கினர். இதனை அறிந்த பொற்கொல்லன், அவன் கள்வனே என்று வற்புறுத்திக் கூறிக் கொல்லுமாறு காவலரைத் தூண்டினான். காவலர், அரசன் ஆணையை நிறைவேற்ற எண்ணிக் கோவலனை வெட்டி வீழ்த்திச் சிலம்பை மன்னனிடம் சேர்த்தனர்.

11. கோவலன் கொல்லப்பட்ட செய்தி கண்ணகிக்கு ஆய்ச்சியர் வாயிலாக எட்டியது. அவள், கைக்கோல் இழந்த குருடன் போல ஆற்றுணைத்

துயரால் அறிவு கலங்கினாள்; அழுதாள்; அரற்றினாள்; மதுரை நகரத் தெருக்கள் வழியே புலம்பிச் சென்று, தன் கணவன் வெட்டுண்டு கிடந்த இடத்தை அடைந்தாள்; தன் கணவன் உடல்மீது விழுந்து கோவெனக் கதறினாள்; அவ்வுடலைக் கட்டித் தழுவினாள். அவ்வளவில் கோவலன் உயிர் பெற்று, " மதி போன்ற உன் முகம் வாடியது ஏன்?'' என்று கேட்டான்; அவள் கண்ணீரைக் கையால் மாற்றினான். கண்ணகி, கணவன் திருவடிகளை வணங்கினாள். " கண்ணகி, நீ இங்கிரு,'' என்று சொல்லி, மீண்டும் கோவலன் உயிர் நீத்தான்.



கண்ணகி வழக்குரைத்தல்

12. கண்ணகி அடிபட்ட வேங்கை போலக் கடுஞ்சினம் கொண்டவளாய்த் தலைவிரி கோலத்துடன் பாண்டியன் அரண்மனையை அடைந்தாள்; தன்

வழக்கை எடுத்துரைத்தாள்; தன் கணவனைக் கொன்ற பாண்டியன் நீதியைப் பழித்தாள்; அரசன் கோவலனிடமிருந்து பெற்ற சிலம்பைக் கொண்டுவரச் செய்தாள்; அதனை அரசன் எதிரில் உடைத்தாள். அதினின்று மாணிக்கப் பரல்கள் தெறித்தன. அரசமா தேவியின் சிலம்போ முத்துப்பரல்கள் கொண்டது. ஆதலால் மாணிக்கத்தைக் கண்ட அரசன் நடுங்கினான்; "வஞ்சகப் பொற் கொல்லன் வார்த்தையை மெய்யென்று நம்பி நீதி தவறினேன்; பாண்டியர் மரபின் பெருமையைக் கெடுத்தேன்; நானோ அரசன்? நானே கள்வன்!" என்று கூறினான்; அரியணையிலிருந்து சாய்ந்து வீழ்ந்து உயிர்நீத்தான். இந்நிலை கண்ட அரசமாதேவி பதைபதைத்துத் தன் கணவன் மீது விழுந்து உயிர் துறந்தாள். பிறகு கண்ணகி மதுரை நகரைத் தீயுண்ணுமாறு சபித்தாள். தீ மதுரை மாநகரை எரித்தது.

13. பின்னர்க் கண்ணகி, வையை ஆற்றங் கரை வழியே மதுரையை விட்டு மேற்கு நோக்கிச் சென்றாள்; மலை நாட்டைச் சேர்ந்த திருச்செங்குன்றம் என்னும் மலைமீது ஏறினாள்; ஒரு வேங்கை மர நிழலில் நின்றாள். அப்போது கோவலன் வான ஊர்தியில் அங்கு வந்தான்; கண்ணகியை அவ்வூர்தியில் ஏற்றித் தன்னுடன் அமர்த்திக்கொண்டான். வானவர் போற்ற வீர பத்தினி கணவனுடன் விண்ணுலகு சென்றாள்.

14. வீர பத்தினியாகிய கண்ணகி தனது நாட்டிற்குள் வந்து விண்ணகம் சென்றாள் என்பதறிந்த சேரன் செங்குட்டுவன், அவளுக்குக் கோயில் எடுக்க விரும்பினான்; அவளது உருவத்தைச் செதுக்குவதற்குரிய கல்லை இமயத்திலிருந்து கொணர்ந்தான்;

அதனைக் கங்கையில் நீராட்டி, உருச் சமைத்துத் தான் கட்டிய கோயிலில் எழுந்தருளச் செய்து விழா நடத்தினன். அவ்விழாவிற்குப் பல நாட்டு மன்னரும் வந்திருந்தனர். பின்னர் அம்மன்னர் ஒவ்வொரு வரும் தத்தம் நாட்டில் பத்தினிக்குக் கோவில் எடுத்து வழிபட்டனர். இவ்வாறு பத்தினிக் கடவுளாகிய கண்ணகியின் பெயரும் புகழும் பல நாடுகளிற் பரவின. செங்குட்டுவன் தம்பியான இளங்கோவடி கள் கண்ணகியின் வரலாற்றைச் **சிலப்பதிகாரம்** என்னும் பெயர் கொண்ட பெருங்காவியமாகப் பாடி முடித்தார்.

### அருஞ்சொற்பொருள்

காப்பியம் - ஒரு சிறந்த தலைவன் வரலாறு கூறும் நூல். துறவி - வாழ்க்கை இன்பங்களைத் துறந்தவர். இருக்கை - இருப் பிடம். மடந்தை - பெண். உண்டி - உணவு. நல்லியல்பு - நற் குணம். புறத்தே - வெளியே. அந்தப்புரம் - அரசி இருக்கு மிடம். கவர்ந்த - திருடிய. ஆய்ச்சியர் - இடைக்குலப் பெண்கள். மதி - சந்திரன். மாற்றினன் - துடைத்தான். அரியணை - சிங்க ஆசனம்; அரசன் அமரும் பீடம். வானவர் - தேவர். விண்ணகம் - வானுலகம்.

### வினுக்கள்

விடை தருக :—

1. கண்ணகி வரலாறு கூறும் நூலின் பெயர் யாது? அப்பெயர்க்குக் காரணம் என்ன?
2. கண்ணகி இருந்த காலத்தில் ஆண்ட மூவேந்தர் எவரெவர்?
3. கோவலன் கண்ணகியுடன் பூம்புகாரைவிட்டு எவரும் அறியாமல் சென்றது ஏன்?
4. மதுரையில் இவர்களுக்கு ஆதரவளித்தவர் எவர்?
5. கவுந்தியடிகள் என்பவர் யார்?
6. கோவலன் ஏன் கொல்லப்பட்டான்?
7. கோவலன் கொல்லப்பட்டது அறிந்த கண்ணகி யாது செய்தாள்?
8. தன் கணவன் குற்றமற்றவன் என்பதைக் கண்ணகி எவ்வாறு மெய்ப்பித்தாள்?
9. கண்ணகியின் பெயரும், புகழும் எவ்வாறு பல நாடு களிலும் பரவின?

## பயிற்சி

1. அழுதாள், புலம்பினுள்—ஒரு பொருள் தரும் சொற்கள். இவைபோன்ற சொற்களை எடுத்தெழுதுக.

2. புறத்தே, உண்மை, தயங்கினர், அழுதாள், பெருமை.—எதிர்ச்சொல் கூறுக.

3. கைக்கோல் இழந்த குருடன் போல என்பது ஒன்றை விளக்கிக் காட்ட வந்ததால் உவமை அல்லது உவமானம் எனப் படும். இவ்வாறு வரும் உவமைகளை மனப்பாடம் செய்து கட்டுரைகளில் பயன்படுத்துக.

## இலக்கணம்

1. அ, ஆ, இ, ஈ-இவ்வெழுத்துக்களை உச்சரித்துப் பாருங்கள். அ-என்று கூறும்போது சிறிது வாயைத் திறந்து உச்சரிக்கிறோம்; ஆ-என்றபோது வாயை மேலும் திறந்து சிறிது நீட்டி உச்சரிக்கிறோம். இவ்வாறு எழுத்துக்களை உச்சரிக்கும்போது நன்கு ஒலிக்கும்படி கவனித்து உச்சரிக்க வேண்டும். இவ்வாறு வாயினுல் ஒலிக்கும் எழுத்துக்கு ஒலி எழுத்து என்பது பெயர்.

2. எழுத்துக்களை வாயினுல் உச்சரித்தால்மட்டும் போதுமா? கையினுல் எழுதியும் காட்டவேண்டும். ஒவ்வோர் எழுத்தையும் எழுத வேண்டிய முறை தெரிந்து சரியான வடிவத்தில் எழுத வேண்டும். அவ்வாறு எழுதப்படும் எழுத்து வரி எழுத்து எனப்படும்.

ஒலி எழுத்துக்கள் பலவகைப்படும்.

3. அ, இ, உ, எ, ஒ—என்னும் எழுத்துக்களையும், ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ—என்னும் எழுத்துக்களையும் உச்சரிக்கும் போது ஒலி வேறுபடுகிறது. முதலில் உள்ள 5 எழுத்துக்களும் குறுகிய ஓசையோடு உச்சரிக்கப்படுகின்றன. பின் உள்ள 7 எழுத்துக்களும் நீட்டி ஒலிக்கப்படுகின்றன. ஆதலால் ஒலிகாரணமாக முதலில் உள்ளவை குற்றெழுத்தென்றும், பின் உள்ளவை நெட்டெழுத்து என்றுங் கூறப்படுகின்றன. இவை ஒலியால் வேறுபடும் எழுத்துக்கள்.

4. மெய்யெழுத்துக்கள் 18-இல் க்-ங்-ய்.-இவற்றை உச்சரித்துப் பாருங்கள். க்-வலிய ஓசையோடு உச்சரிக்கப்படுகிறது. ங்-மெல்லிய ஓசையோடு உச்சரிக்கப்படுகிறது. ய்-நடுத்தர ஓசையோடு உச்சரிக்கப்படுகிறது. ஆதலால் இவை ஒலிபற்றி முறையே வல்லினம், மெல்லினம், இடையினம் என்று கூறப்படுகின்றன.

க் ச் ட் த் ப் ற்—இந்த ஆறும் வல்லெழுத்துக்கள்
ங் ஞ் ண் ந் ம் ன்—இந்த ஆறும் மெல்லெழுத்துக்கள்
ய் ர் ல் வ் ழ் ள்—இந்த ஆறும் இடையெழுத்துக்கள்
இவற்றை உச்சரித்துப் பார்த்து அறிந்துகொள்க.

# 4. காகிதம் செய்தல்

1. மக்களின் நாகரிக வாழ்வில் காகிதம் தேவையான பொருள் ஆகும். உடலை வளர்க்க உணவு எப்படி இன்றியமையாததோ, அது போன்றே அறிவை வளர்ப்பதற்குப் பெரிதும் இன்றியமையாததாக இருப்பது காகிதமே ஆகும். காகிதம் இல்லையென்றால், இன்று நாம் படிக்க முடியுமா? எழுத முடியுமா? இன்று பணமாகப் பயன்படுவதும் காகிதமே அல்லவா?

2. பண்டைக் காலத்தில் நம் நாட்டில் பனை ஓலையே காகிதமாகப் பயன்பட்டது. நம் செந்தமிழ் இலக்கிய இலக்கண நூல்கள் அனைத்தும் பனை ஓலை ஏடுகளில் எழுதப்பட்டவையே யாகும். கருங்கல், செப்புத் தகடு முதலியவை அக்காலத்தில் ஏடுகளாகப் பயன்படுத்தப்பட்டன. அதே காலத்தில் மேனாட்டினர் பதம் செய்த தோலில் எழுதிவந்தனர். வேறு சிலர் களிமண் ஓடுகளில் எழுதி, அவற்றை நெருப்பிலிட்டுச் சுட்டுச் சேமித்து வைத்தனர். இவ்வாறு இருந்ததால், அப் பழங்காலத்தில் இன்று போல நூல்கள் பேரளவில் பரவக்கூடவில்லை. காகிதம் கண்டுபிடிக்கப்பட்டது முதல், அது கல்வியை எங்கும் பரவ வைக்கும் கருவியாகிவிட்டது.

3. காகிதத்தை முதன்முதலில் கண்டுபிடித்தவர்கள் சீன நாட்டினரும் எகிப்தியருமே ஆவர். எகிப்தியர் பாப்பிரஸ் என்னும் ஒருவகைப் புல்லைக் குறுக்கும் நெடுக்குமாக அடுக்கி, நீரில் ஊறவைத்து, நன்றாகத் தடியால் அடித்துப் பதியவைப்பதன் மூலம் ஒருவகைக் காகிதத்தைச் செய்தனர். அதே காலத்தில்

சீனர் பட்டு, பருத்தி, கம்பளம், கந்தைகள், நார் முதலியவற்றைக் கொண்டு ஒருவகைக் காகிதம் செய்தனர். அரேபியர், சீனரிடமிருந்து காகிதம் செய்தலைக் கற்றுக்கொண்டனர். ஆனால், அவர்கள் சீனர் செய்ததைவிடச் சற்றுத் திருத்தமான முறையில் செய்தனர்.

4. காகிதம் செய்வதற்குரிய இயந்திரங்கள் பதினெட்டாம் நூற்றாண்டு வரையில் கண்டுபிடிக்கப்படவில்லை. ஆனால், கோரைப்புல், பழைய பட்டுத்துணி, கந்தைத்துணி, சணல், நார், கம்பளம், மூங்கில் முதலியவற்றைப் பயன்படுத்திக் கையாலேயே காகிதம் செய்யும் முறையைப் பல நாட்டினரும் அறிந்திருந்தனர்.



கையால் காகிதம் செய்தல்

5. கையால் காகிதம் செய்வோர் இவற்றைத் துண்டு துண்டாகக் கிழித்துப் போட்டு, நீரில் ஊற

வைத்து இடித்து அழுக்குப் போக்கிச் சுண்ணும்புக் கலவை நீரை அதனுடன் சேர்த்துக் கூழ் போல ஆக்குவர் ; பிறகு, இக் கூழில் சல்லடைக் கண் பொருத்தப்பெற்ற சட்டங்களை முழுக்கி எடுப்பர் ; சல்லடைக் கண்கள் வழியே நீர் வடிந்து கூழ் மட்டும் பரவி நிற்கும். பின், அதன்மீது அரிசிமா கலந்த நீரைத் தெளித்துக் காயவைப்பர் ; அது காய்ந்தவுடன் வழவழப்பான கற்களாலும் கண்ணுடிகளாலும் செய் யப்பட்ட உருளைகளை அதன்மீது உருட்டிச் சமப் படுத்துவர் ; பிறகு வழவழப்பான கற்களால் தேய்த் துக் காகிதம் வழவழப்பாகுமாறு செய்வர். இதுதான் அந்தக் காலத்துக் காகிதம் செய்யும் முறை.

6. மேனுட்டார் எஸ்பர்டோ புல்லைப் பயன் படுத்தினர். அதுவும் அருகிவிட்டால் என்ன செய்வது என்று கவன்ற அறிஞர் சிலர், மென்மையான ஒரு வகை மரங்களைத் துண்டு துண்டாக நறுக்கிக் கூழாக்கிக் காகிதம் செய்யும் முறையைக் கண்டனர். இத்தகைய மென்மை வாய்ந்த மரங்கள் ஸ்வீடன், நார்வே போன்ற இடங்களில் ஊசியிலைக் காடுகளில் நிறைய வளர்ந்தபடியால், மரக்கூழால் காகிதம் செய் யும் வேலை அவ் வடகோடி நாடுகளில் வளர்ந்தது. அவ்வடகோடி நாட்டினர் காகிதத்திற்காக மரங்களை வெட்டினுல், மீண்டும் அவ்விடங்களில் புதிய கன்று களை நட்டு மரமாக்கி வந்தார்கள். இன்றும் மரக்கூழ் கொண்டு செய்யப்படும் காகிதங்கள் ஸ்வீடன், நார்வே நாடுகளிலிருந்து பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

7. காகிதம் செய்யும் இயந்திரங்கள் 18-ஆம் நூற்றுண்டில் கண்டுபிடிக்கப்பட்டன. கந்தைகளைக் கிழித்து மாசகற்றி, மருந்துகள் கலந்த தண்ணீரில்

கொதிக்க வைத்து ஒரு பெரிய இரும்புத் தொட்டியில் சேர்த்துப் பின் காகிதத்தைச் சுருள் சுருளாக எடுக்கும் வேலைவரை இயந்திரங்களே செய்து முடிக்கின்றன. கந்தையாயினும், எஸ்பர்டோ புல்லாயினும், மரமாயினும், மூங்கிலாயினும் இவ்வாறே இயந்திரத்தின் மூலம் கூழாகி, வெளுக்கப்பட்டபின் குழாய்கள் மூலம் இயந்திரத்திற் செலுத்தப்பட்டுக் காகிதமாகின்றன.

8. இந்தியாவில் வங்காளம், ஐதராபாத், திருவாங்கூர், மைசூர், ஆந்திரநாடு, பாண்டிநாடு ஆகியவற்றில் காகித ஆலைகள் நிறுவப்பட்டிருக்கின்றன. இவை, கந்தை, வைக்கோல், கோரைப்புல், மூங்கில், பழைய குப்பைக் காகிதங்கள், கழிவுப் பஞ்சு முதலியவற்றைக்கொண்டு காகிதங்கள் செய்து வருகின்றன.

9. காகிதங்கள் இன்று நூல்களுக்கும் செய்தித் தாள்களுக்கும் பயன்படுகிறது; நிலத்திற்கடியில் புதைக்கப்படும் மின்சாரக் கம்பிகளைச் சுற்றவும் உதவுகிறது; வீடுகளுக்குச் சுவராக இருக்கவும், வீட்டுச் சுவர்களை அலங்கரிக்கவும், திண்பண்டங்களைச் சுற்றிவைக்கவும் பயன்படுகிறது; பணமாகப் பயன்படுத்தும் கரன்சி நோட்டுகள் அச்சிடவும், செய்திகளை அறிவிக்கும் தபால்களாகவும், இன்னும் பல்லாயிரக்கணக்கான வகையாகவும் காகிதம் உதவுகிறது. இன்று காகிதம் இல்லையானால் கல்வியில்லை, செல்வமில்லை, வாழ்வில்லை, ஆட்சியில்லை என்ற நிலைமைக்குக் காகிதம் சிறப்பிடம் பெற்றுவிட்டது.

அருஞ்சொற்பொருள்

இன்றியமையாதது - இல்லாமல் முடியாதது; அவசியமானது. அருகி - அருமையாகி. மாசு - அழுக்கு, குற்றம்.

## வினுக்கள்

விடை தருக :—

1. 'காகிதம் இன்றியமையாத பொருள்'—எப்படி?

2. பண்டைக் காலத்தில் காகிதமாகப் பயன்பட்டவை யாவை?

3. காகிதம் முதன்முதலில் எவரால் கண்டுபிடிக்கப்பட்டது?

4. எகிப்தியர் முதலில் காகிதம் எப்படிச் செய்தனர்?

5. அரேபியர் காகிதம் செய்யக் கற்றுக்கொண்டது எப்படி?

6. கையால் காகிதம் செய்வது எப்படி?

7. காகிதம் செய்ய இன்று என்னென்ன பொருள்கள் பயன்படுத்தப்படுகின்றன?

8. இயந்திரங்கள் மூலம் காகிதம் எவ்வாறு செய்யப் படுகிறது?

9. இந்தியாவில் எங்கெங்குக் காகிதம் செய்யப்படுகிறது?

10. காகிதத்தின் பயன்கள் யாவை?

## பயிற்சி

1. கீழ்வருவனவற்றை உங்கள் சொற்றொடர்களில் பயன்படுத்துக:

இன்றியமையாத, நாகரிக வாழ்வு, பயன்படுவது, பனை ஓலை, பேரளவு, சற்றேறக்குறைய, குறுக்கும் நெடுக்குமாக, திருத்தமான முறை, துண்டு துண்டாக, வழவழப்பான.

2. ஏடு + இல் = ஏட்டில்
நாடு + பெருமை = நாட்டுப்பெருமை

3. வயிறு + வலி, ஆடு + கால், காடு + மரம், வீடு + வழக்கம்—இவற்றைச் சேர்த்துக் கூறுக.

4. மென்மையான, புதிய, வழவழப்பான, பேரளவு, பலர், இறக்குமதி, புதுமைகள்—எதிர்ச்சொல் கூறுக.

## இலக்கணம்

1. அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ-இப் பன்னிரண்டு எழுத்துக்களும் உயிர் எழுத்துக்கள்.

2. க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன்—இப்பதினெட்டும் மெய்யெழுத்துக்கள்.

3. உயிரெழுத்துக்கள் மெய்யெழுத்தின் உதவி இல்லாமல் ஒலிக்கும் தன்மையுடையன. இவை உயிர்போலத் தனித்து இயங்குவதால் உயிர் எழுத்துக்கள் என்று பெயர் பெற்றன.

4. மெய் - உடம்பு. மெய்யெழுத்துக்கள் உயிர் இல்லாத உடம்பு போல உயிரெழுத்தின் உதவி இல்லாமல் இயங்கமாட்டா. ஆதலால் மெய்யெழுத்துக்கள் எனப் பெயர்பெற்றன.

5. க் + அ = க. க்-மெய்யெழுத்து. அ-உயிரெழுத்து. க-உயிர்மெய்யெழுத்து. இவ்வாறு 18 மெய்யோடு 12 உயிர் எழுத்துக்கள் சேர்ந்தால் $12 \times 18 = 216$ உயிர்மெய்யுழுத்துக்கள் ஆகின்றன.

6. கா, கி, வா, ழி, யா, து—இவைகளில் வந்த மெய்யெழுத்துக்களையும் உயிர் எழுத்துக்களையும் பிரித்து எழுதுக.

7. ஆய்த எழுத்து (ஃ)—இப்படி மூன்று புள்ளி வடிவத்தோடு வரும். இது வார்த்தைகளின் இடையில் மட்டுமே கலந்துவரும்.

## 5. கலிங்கத்துப் போர்

1. இராசராச சோழன், கங்கைகொண்ட சோழன் என்பவர்க்குப் பிறகு சோழப் பெருநாட்டை ஆண்ட பெருவீரன் **முதற் குலோத்துங்கன்** ஆவன். இவன் ஐம்பது ஆண்டுகள் (கி. பி. 1070—1120) அரசாண்டான். இவனுடைய ஆட்சி கோதா விரி ஆறுவரை பரவியிருந்தது. அதற்கு அப்பா லுள்ள கலிங்க நாடும் குலோத்துங்கனுக்கு அடங்கித் திறை கட்டிவந்தது.

2. முதற் குலோத்துங்கன் போர்த்திறன் மிக்க வன் ; அரசியல் அறிவிற் சிறந்தவன். அவன் தன் ஆட்சியிலிருந்த பெருநிலப் பகுதிகளில் நிலைப்படை கள் வைத்துக் கலகங்கள் நிகழாவண்ணம் காத்தான் ; உள்நாட்டு வெளிநாட்டு வாணிகத்தை வளர்த்தான் ; நிலங்களை அளப்பித்தான் ; குடி மக்களை உயிரெனப் பாதுகாத்தான். சுங்க வரியை நீக்கிச் '**சுங்கம் தவிர்த்த சோழன்**' எனக் குடிகளாற் பாராட்டப் பெற்றான். குடிமக்கள் இவ் வேந்தனிடம் பேரன்பு கொண்டு விளங்கினர்.

3. இவனது தலைநகரம் கங்கைகொண்ட சோழ புரம் ஆகும். ஆயினும் சோழப் பேரரசு மிகப் பரந் திருந்ததால், காஞ்சி மாநகரம் அதன் வடபகுதிக்குத் தலைநகரமாக இருந்தது. முதற் குலோத்துங்கன் ஒரு முறை காஞ்சி மாநகரத்திலிருந்தபொழுது சிற்றரசர் பலர் வந்து அவனைக் கண்டனர் ; தாங்கள் ஆண்டு தோறும் செலுத்தவேண்டிய கப்பத் தொகைகளைச் செலுத்தினர். அப்பொழுது குலோத்துங்கன், வட கலிங்க மன்னனான **அனந்தபதும சோடகங்கன்**

என்பான் சில ஆண்டுகளாகத் திறைப் பணம் செலுத்தவில்லை என்பதைக் கணக்கர் மூலம் அறிந்தான்; உடனே, தன் சேனைத் தலைவனான கருணாகரத் தொண்டைமானைப் பார்த்தான். அவ்வளவில், அப்பார்வையின் குறிப்புணர்ந்த தொண்டைமான் வட கலிங்கநாட்டின்மீது படையெடுத்தான்.

4. சோழப் படைகள், வழியில் பாலாறு, குசைத்தலை, பொன்முகரி, கொல்லி, வடபெண்ணை, குன்றி, கிருஷ்ணை, கோதாவிரி, பம்பை, கோதமை முதலிய ஆறுகளைக் கடந்து, கலிங்கநாட்டிற் புகுந்தன; பல ஊர்களைத் தாக்கின; அரசியல் நிலையங்களுக்கு எரியூட்டின; சூறையாடின. சோழப் படைகள் கடல் பொங்கி வருவதுபோன்று நாட்டிற் புகுந்து செய்த அலங்கோலச் செயல்களைக் கண்ட குடிகள் நடுநடுங்கி அலறி, அரசன் அவைக்கு ஓடிச் சென்று முறையிட்டனர்.

5. அனந்தபதுமன் இச்செய்தி கேட்டுப் பெருஞ்சினங் கொண்டான். "சோழனுக்குத் திறை செலுத்தவில்லை என்பதற்காகப் போரா? அவனுக்கு யான் இளைத்தவனோ! நன்று; படைகளைச் சோழன் நடத்தி வரவில்லை. அவன் படைத் தலைவர்களே நடத்திவந்துளர். நம் நாடு மலை அரணும் கான் அரணும் கடல் அரணும் உடையது. என் தோள் வலியையும் வாள் வலியையும் அவன் அறியான். அதனால் என் நாட்டிலேயே என்னை எதிர்க்கத் துணிந்தனன்போலும்! பேதை. கருணாகரன் ஒரு பித்தன். அவன் படைகள் இங்கு வந்திருப்பது கொடிய சிங்கத்தை வெல்ல அதன் குகைக்குள்ளே நரிகள் புகுவதை ஒத்திருக்கிறது," என்று சினந்து கூறினான்; தன்னுடைய நால்வகைச் சேனைகளையும் உடனே

போருக்கெழுமாறு ஆணை பிறப்பித்தான். சோழப் படைகளைச் சின்னபின்னப்படுத்துமாறு கலிங்க வீரர்களைத் தூண்டினான்.

6. அவ்வமயம், அரசன் அருகில் இருந்த எங்கராயன் என்னும் பெயருடைய அமைச்சன் அனந்தபதுமனுக்கு அறிவுரை கூறினான் ; திறைப் பணம் கொடுத்து அனுப்பிவிடுதலே நல்லது என்று சொன்னான் ; சோழப் படைகளை நடத்திவந்துள்ள கருணாகரன் பெருவீரன் என்பதையும், அவன் தலைமையில் வந்த சோழப் படை அதுவரை பெற்ற பெரு வெற்றிகளையும் அரசனுக்கு விளங்க உரைத்தான்.

7. கலிங்கன், தன் அமைச்சனின் அறிவுரையை ஏற்கவில்லை ; போர் முரசங் கொட்டினான். இரு நாட்டுப் படைகளும் போரில் இறங்கின. போர் மிக்க கடுமையாக நடந்தது. கலிங்கன் யானைப் படை மிக்கவனாகையால், சோழ வீரர் குறிவைத்துப் பல யானைகளைக் கொன்றனர் ; கலிங்கப் படையைச் சூழ்ந்து வளைத்துத் தாக்கி அழிக்கத் தொடங்கினர். தன் படை இங்ஙனம் செயலற்று அழிவதைக் கண்ட அனந்தபதுமன் தன் தோழர் சிலருடன் தப்பியோடி ஒரு மலைக் குகையில் ஒளிந்துகொண்டான்.

8. தப்பி ஓடிய கலிங்க வீரருள் சிலர், தம் நிழலைக் கண்டு, பகைவர் தம்மைப் பின் தொடர்ந்து வருவதாக நினைத்து உயிர்ப்பிச்சை கேட்டு ஓலமிட்டவண்ணம் ஓடினர். மற்றும் சிலர் வில்லின் நாணை யறுத்துப் பூணூலாகத் தரித்துக்கொண்டு, தாங்கள் காசிக்குச் செல்லும் வேதியர் என்றும், இடைவழியில் போர்க்களத்தில் சிக்கிக்கொண்டதாகவும் கூறித் தப்பினர். மற்றுஞ் சிலர் இரத்தந் தோய்ந்து செந்நிறமாகிய உடையைத் தரித்துத் தலையை

மொட்டையாக்கிக்கொண்டு தாம் துறவிகள் என்று சொல்லித் தப்பிப் பிழைத்தனர்.



கலிங்க வீரர் தப்பிப் பிழைத்தல்

9. கருணாகரன் தன் வீரரை ஏவி, அனந்தபதுமனைச் சிறை செய்தான்; கலிங்க அரண்மனையிலிருந்த பெருஞ் செல்வத்தைக் கைப்பற்றினான்; ஆயிரக் கணக்கான கரிகளையும், பரிகளையும், போர்க் கருவிகளையும் கைப்பற்றினான். பின்பு அவன் இப் பொருள்களுடன் கலிங்க அரசனை அழைத்துச் சென்று, சோழன் அவையில் நிறுத்தினான்.

10. சோழப் பேரரசனான முதற் குலோத்துங்கன் கருணாகரனைப் பலவாறு பாராட்டிப் புகழ்ந்து பட்டங்களும் பரிசுகளும் அளித்துச் சிறப்பித்தான்; உதவித் தலைவர்களையும் படைவீரர்களையும் பாராட்டி அவரவர் தகுதிக்கேற்பப் பரிசுகளும், பட்டங்களும் வழங்கினான்; பின் அனந்தபதுமனை அன்புடன் நடத்தி,

அறிவுரை கூறி, தனக்கு அடங்கித் திறை செலுத்து மாறு பணித்துக் கலிங்கத்துக்கு அனுப்பினான்.

11. இக் கலிங்கப் போர்நிகழ்ச்சியை விரிவாக எடுத்துக் கூறும் நூல் **கலிங்கத்துப் பரணி** என்பது. இந்நூலைச் சோழனது ஆதரவு பெற்ற **சயங்கொண்டார்** என்ற பெரும்புலவர் பாடிப் பரிசிலும் பாராட்டும் பெற்றார். நீங்கள் மேல் வகுப்புக்களில் இந்நூற் பகுதிகளைப் படித்து அறியலாம்.

### அருஞ்சொற்பொருள்

பேரரசு - பல சிற்றரசுகளைத் தனக்கடிப்படுத்தி ஆளும் அரசு. திறை - கப்பம். கரி - யானை. பரி - குதிரை. அரண் - காவல். நால்வகைப் படை - யானை, குதிரை தேர், காலாள் என்ற நான்கு வகைப் படைகள். குருதி - இரத்தம்.

### வினாக்கள்

விடை தருக :—

1. முதற் குலோத்துங்கன் ஆட்சி நலன்கள் எவை ?
2. கருணாகரத் தொண்டைமான் யாவன் ?
3. கலிங்கக் குடிகள் அலறி அரசவைக்கு ஓடுமாறு நிகழ்ந்தவை யாவை ?
4. கலிங்க மன்னன் சோழர் படையெடுப்புக் குறித்து சினந்து கூறியன யாவை ?
5. எங்கராயன் கூறிய அறிவுரை யாது ?
6. கலிங்கப்போர் நிகழ்ச்சிகளை விவரித்துக் கூறுக.
7. கலிங்க வீரர் சிலர் எவ்வாறு தப்பி ஓடினர் ?
8. கருணாகரன் வெற்றியுடன் மீண்ட சிறப்பினை விவரிக்க.
9. சோழ மன்னன் கலிங்க மன்னனை எவ்வாறு நடத்தினான்?
10. இப்போரைப்பற்றிக் கூறும் நூல் எது ?

### பயிற்சி

1. எதிர்ச் சொற்கள் கூறுக :—பேரரசு, செல்வம், புகழ்ந்து, வெற்றி, பரவி, விரிவு, சில, அருகில்.

2. சொந்த வாக்கியங்களில் பயன்படுத்துக :—குறிப்பிடத்தக்கது, பணியாமல், நிலைப்படைகள், தலைநகர், நடுநடுங்கி, சின்னபின்னம், வழியின்றி, அவைப்புலவர்.

3. ஒரு கருத்தைத் தெரிவிக்கும் பல வாக்கியங்களின் சேர்க்கை பத்தி (பாரா) எனப்படும். இப்பாடத்தில் 11 பாராக்கள் இருக்கின்றன. அவற்றைப் படியுங்கள். ஒவ்வொரு பத்தியும் உணர்த்தும் கருத்தை அறிந்து, ஒவ்வொரு பாராவுக்கும் தலைப்புக் கொடுங்கள்.

## இலக்கணம்

### நிறுத்தற் குறிகள்

(1) கருணாகரன் கலிங்க மன்னனைச் சோழன் அவையில் நிறுத்தினான். இவ்வாக்கியத்தின் முடிவில் வைக்கப்பட்டுள்ள புள்ளி **முற்றுப்புள்ளி** எனப்படும். முற்றுப்புள்ளி உள்ள இடத்தில் நான்கு மாத்திரை நேரம் நிறுத்தவேண்டும்.

(2) கருணாகரன் அனந்தபதுமனைச் சிறை செய்தான்; அரண்மனைச் செல்வத்தைக் கைக்கொண்டான்; கரி பரிகளையும் கைப்பற்றினான். இவ்வாக்கியத்தின் இடையில் (;) இவ்வாறு இடப்பட்டுள்ள குறியே **அரைப்புள்ளி** எனப்படும். இங்கு இரண்டு மாத்திரை நேரம் நிறுத்தவேண்டும்.

ஒரு வாக்கியத்தில் எழுவாய் ஓரிடத்தில் வந்து, பயனிலை பல இடங்களில் வந்தால், அப்பயனிலைகளுக்குப் பக்கத்தில் அரைப் புள்ளி இடவேண்டும்.

(3) புலவர் அரண்மனை அடைந்து, அரசனைக் கண்டு, செய்யுள் பாடி, பரிசில் பெற்றார். இவ்வாக்கியத்தில் பொருள் விளங்குவதற்காகப் பல இடங்களில் (,) இக்குறி இடப்பட்டுள்ளது. இது **காற்புள்ளி** எனப்படும். காற்புள்ளி உள்ள இடத்தில் ஒரு மாத்திரை நேரம் நிறுத்தவேண்டும்.

(4) திறை செலுத்தாத மன்னர் யாவர்? அவர் எத்தனை ஆண்டுகள் திறை செலுத்தவில்லை? இவ் வினா வாக்கியங்களில் வந்த (?) இக்குறி **வினாக்குறி** எனப்படும். இங்கு நான்கு மாத்திரை நேரம் நிறுத்தவேண்டும்.

(5) அந்தோ! காந்தியடிகள் இறந்துவிட்டார். இது என்ன புதுமை!—என்று இவ்வாறு வருத்தம், கவலை, அச்சம், வியப்பு முதலிய உணர்ச்சிகளைத் தெரிவிக்கும் இடத்தில் இவ்வாறு (!) இடப்பட்டுள்ள குறி **உணர்ச்சிக் குறி** எனப்படும். இங்கு நான்கு மாத்திரை நேரம் நிறுத்தவேண்டும்.

(6) ஆசிரியர் என்னைப் பார்த்து, "நீயும் நாளை மகாபலிபுரம் வரவேண்டும்," என்று கூறினார். இதில் "—" இம் மேற்கோள் குறிகளுக்குள் உள்ள வார்த்தைகள் ஆசிரியர் கூறியவை. இவ் வாறு ஒருவர் கூறியதை அப்படியே கூறின், மேற்கோள் குறி இட வேண்டும். இவ்வாறு உங்கள் பாடப் பகுதியில் வந்திருப்பன வற்றைக் கவனித்துக்கொள்க.

# 6. மாணவர் இல்லம்



வள்ளலார் மாணவர் இல்லம்

1. பண்டைக் காலத்தில் நம் நாட்டில் மாணவர் குருகுலங்களில் கல்வி பயின்றுவந்தனர். குருகுலக் கல்வி என்பது, மாணவர் ஆசிரியருடன், அவரது இல்லத்திலேயே தங்கியிருந்து, கல்வி பயிலுதலே யாகும். அப்பண்டை முறையினைத் தழுவியே இன்று பள்ளிகள் சில, மாணவர் இல்லங்களை அமைத்துக் கல்வி பயிற்றுகின்றன. இத்தகைய மாணவர் இல்லங்களுள் சிறந்த ஒன்றினைப் பற்றி நீங்கள் இங்கு அறிதல் நலம்.

2. செங்கற்பட்டு மாவட்டத்தில் பாலாற்றங்கரையில், வாலாஜாபாத் என்னும் ஊரில், பசுமை நிறைந்த இளமரச் சோலையில் அமைந்துள்ள **இந்து மத பாடசாலையின் வள்ளலார் மாணவர் இல்லம்** சிறப்

பித்துக் கூறத் தக்கதாகும். இப்பாடசாலை, முப்பத்து நான்கு ஆண்டுகட்கு முன்னர் நான்கே மாணவருடன் தொடங்கப்பட்டது. இது இன்று எட்டு வகுப்புக்களுடன் எழுநூறு மாணவர்களைக்கொண்ட உயர்நிலைத் தொடக்கப்பள்ளியாக விளங்குகிறது.

3. "சிறுவர்கள் நாட்டுப் பற்றுடன் வளர வேண்டும்; அவர்களிடம் நல்ல பண்புகள் சிறக்க வேண்டும்; அவர்கள் சிறந்த குடிமக்களாக வாழ வேண்டும்; தாய் மொழியே தங்கள் உயிர் என்பதை உணர வேண்டும்; ஒழுக்கம் மிக்கவராய் உயர வேண்டும்; உடல் நலத்துடன் அறிவு வளமும் பெற வேண்டும்; நாட்டில் மக்களுக்குள் எவ்வித வேற்றுமை உணர்ச்சிக்கும் இடமிருத்தல் கூடாது. வருங்காலத் தமிழகத்தில் எல்லோரும் உடன் பிறப்பு உணர்ச்சியோடு வாழ வேண்டும்; திருக்குறளே நமக்கு வழிகாட்டியாக அமையவேண்டும்," என்பதே இப்பள்ளியின் நோக்கமாக இருக்கிறது.

4. வள்ளலார் மாணவர் இல்லம் ஆசிரியருடன் மாணவர் உறைந்து பயிலும் இல்லமாக அமைந்திருக்கிறது. இவ்வில்லம், திருவருட்பா என்னும் அருள் நூலை அருளிச் செய்த சிதம்பரம் இராமலிங்கப் பெருமானரின் பெயரால் அமைக்கப்பட்டிருக்கிறது. 'அனைத்துயிரும் ஆண்டவன் மக்கள்; ஆருயிர்கட் கெல்லாம் அன்பு செய்தல் வேண்டும்' என்னும் அப் பெருமானின் கொள்கைகளைச் செயல் முறையில் ஒவ்வொருநாள் வாழ்க்கையிலும் மாணவர்களைக் கைக் கொள்ளுமாறு செய்ய வேண்டும் என்பதே இவ்வில் லத்தின் நோக்கமாகும்.

5. இம்மாணவர் இல்லத்தில் எல்லா வகுப்புச் சிறுர்களுமாக ஐந்நூற்றிருபது பேர் இருக்கின்றனர்.

இவர்களுள் நூற்றுப்பதின்மர் பழந்தமிழ்ச் சிறுவ ராவர். இங்குப் படிக்கும் மாணவர் சத்துள்ள உணவருந்தி, வாழ்க்கைக்கு ஏற்ற கல்வி பயிலுகின் றனர்; தொழிற்சாலையில் விருப்பமான தொழிலைக் கற்கின்றனர்; பாலாற்று மணலில் பாங்குடன் விளை யாடி, உடல் நலம் அடைந்து, வேற்றுமை யற்று ஒற்றுமையுடனும் இன்பத்துடனும் இருக்கின்றுர்கள்.

6. மாணவர் இல்லத்தில் விடியற்காலை ஐந்து மணிக்கு மணி அடிக்கப்படும். மாணவர்கள் விழித் தெழுந்து, படுக்கையிலிருந்தபடி இறை வணக்கம் செய்வர்; பின்னர்க் காலைக் கடனாற்றி வந்து, ஆசி ரியர் முன்பு அணியணியாய் அமர்ந்து தம் பாடங் களைப் படிப்பர்; படித்துப் பின் ஏழு மணிக்கு மேல், இல்லத்துப் பணிகளை இனிமையாய்ச் செய்வர்; பின்பு பாலாற்றுக் கால் நீரில் பண்புடன் நீராடி, எட்டு மணிக்கு உணவு கொண்டு, பள்ளிக்குச் செல்வர்; இடையில் பன்னிரண்டு மணிக்குப் பகல் உணவு கொள்வர்; மாலையில் பள்ளியினின்றும் திரும்பியதும் சிற்றுண்டி கொள்வர்; பின்னர் உடற்பயிற்சி செய்தும் விளையாடியும் மகிழ்வர். ஆறு மணி யடித்ததும் இறை வனை வணங்குவர்; பின்பு பாடங்களைப் பிழையறப் படித்து, எட்டு மணிக்கு இரவு உணவு கொள்வர்; ஒன்பது மணிக்கு ஆண்டவன் நினைவோடு அன்று செய்தவற்றை எண்ணிப் பார்த்து, நல்லவற்றிற்காக நன்றி தெரிவித்து, அல்லவற்றிற்காக ஆண்டவனிடம் மன்னிப்புக் கேட்டுப் பின்னர்ப் படுத்து உறங்குவர்.

7. மாணவர் இல்லத்து உண்டி, உறையுள், கருவூலம், காய்கறித் தோட்டம் முதலியவை பற்றிய எல்லாப் பணிகளையும் மாணவர்களே தங்களுக்குள் முறை வைத்துக்கொண்டு கவனித்துவருகின்றனர்.

அவர்களே பயிர்ப் பண்ணையிலிருந்து காய்கறிகளைப் பறித்துக்கொண்டு வருகின்றனர்; அவற்றைச் சமைத்தற்கு ஏற்றவாறு நறுக்கித் தருகின்றனர்; பாலாற்று நீரூற்றிலிருந்து தண்ணீர் கொண்டுவருகின்றனர்; அவர்கள் தாங்கள் உபயோகிக்கும் விளக்குகளைத் துடைத்து நெய்யிட்டு வைக்கின்றனர்; வேண்டியபோது அவ்விளக்குகளை ஏற்றிக்கொள்கின்றனர்; மரங்கள் இருக்கும் மாணவர் இல்லத்தின் பரந்த இடத்தைத் துடைப்பங்கொண்டு துப்புரவு செய்கின்றனர்; தாங்களே உணவு பரிமாறிக்கொண்டு உண்ணுகின்றனர்; உண்டபின், தாங்கள் உணவுண்ட பாத்திரங்களையும் சமையல் பாத்திரங்களையும் துலக்குகின்றனர்; தங்கள் இல்லத்தைக் காண வரும் விருந்தினரை இன்முகம் காட்டி வரவேற்று உணவளித்து வழி அனுப்புவர்; தங்கள் இல்லத்தைச் சுற்றியுள்ள இடத்தைத் தூய்மையாக வைத்திருப்பதில் மிகுந்த கவலை காட்டுவர். மாணவருட் சிலர் நாள்தோறும் அவ்விடத்தை, நகரத்தைத் தூய்மை செய்யும் தொழிலாளரைப்போலத் தூய்மை செய்தல் கண்டு மகிழத்தக்க காட்சியாகும்.

8. இல்லத்து மாணவர்களால் தேர்ந்தெடுக்கப் பெற்ற நூறு உறுப்பினரைக் கொண்ட ஆட்சி மன்றம் மாணவர் இல்லத்தை நடத்துகின்றது. மாணவர் தம் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் முறை பாராட்டத் தக்கது. மாணவர் இல்லம் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பகுதியிலும் உள்ள மாணவர் தங்கள் வாக்குகளைப் போட வரிசையாக நிற்பர். அவர்களை விடுதியில் மேற்பார்வை பார்க்கும் ஆசிரியர் ஒரு பெட்டியை மேசை மீது வைத்துவிட்டுப் பக்கத்தில் உள்ள நாற்காலியில் அமர்ந்திருப்பர். ஒவ்

வொரு மாணவரும் தாம் விரும்பும் பிரதிநிதியின் பெயர் எழுதிய சீட்டினைப் பெட்டியிற் போடுவர். இவ்வாறு எல்லா மாணவரும் சீட்டுகளைப் போட்ட பின்னர், அவை ஒவ்வொன்ருக எடுக்கப்பட்டுக் கணக்கிடப்படும். மிகுதியான வாக்குகளைப் பெற்ற மாணவர் அப்பகுதியின் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப் பெறுவர். இவ்வாறே இல்லத்து எல்லாப் பகுதிகளிலும் தேர்தல் நடைபெறும். ஆட்சி மன்றத் தலைவர், துணைத் தலைவர், உறுப்பினர் முதலியோரை மாணவர் தமக்குள் தேர்ந்தெடுக்கின்றனர். ஆட்சி மன்றக் கட்டளையை மேற்கொண்டு ஆட்சி நடத்தப் பத்துப் பேர் அடங்கிய பொறுப்பு வாய்ந்த அமைச்சர் அவை அமைக்கப்படுகிறது. ஒவ்வோர் அமைச்சருக்கும் ஓர் அவைச் செயலாளர் உண்டு.

9. ஒழுக்கம், கல்வி, நலத்துறை, உடற் பயிற்சி, விளம்பரம், கருவூலம், செப்பனீடு, உட் பொறுப்பு, வேளாண்மை, சட்டம் ஆகிய பத்துத் துறைகளுக்கும் தனித்தனிப் பொறுப்பேற்றுப் பத்து அமைச்சர்கள் உளர். இவர்களுள் ஒருவர் முதலமைச்சர் பொறுப்பேற்பார். இவ்வாறு ஆட்சி மன்றம் தனது ஆட்சியைச் செவ்வனே நடத்துவதன் மூலம் வள்ளலார் இல்லத்தின் நோக்கம் நன்கு நிறைவேறி வருகிறது.

10. பொதுவாக, இத்தகைய சிறந்த அமைப்புக்களின் பயனுக, மாணவர் மகிழ்ச்சி தரும் முறைகளில் கல்வி கற்பிக்கப்பெறுகின்றனர்; ஒழுக்கமும் நற்பண்புகளுமுடைய உயர் குடிமக்களாக வாழப் பழக்கம் பெறுகின்றனர்; உடல் வளர்ச்சியும் வலிமையும் பெறுகின்றனர்; உலகியல் அறிந்து பழகும் திறமை பெறப் பயிற்சியளிக்கப்படுகின்றனர்.

11. இப்பள்ளியும் இதன் இல்லமும் இம்முறைகளால் தமிழகத்தில் ஒப்பற்று விளங்குகின்றன. இவற்றை நன்முறையில் நடத்திவருபவர் வா. தி. மாசிலாமணி முதலியார் என்னும் அறிஞராவர். நமது வாழ்த்து அவருக்கு உரியதாகுக !

### அருஞ்சொற்பொருள்

இல்லம் - வீடு, விடுதி. பண்புகள் - குணங்கள். சிறார் - சிறுவர். மாவட்டம் - ஜில்லா. கருவூலம் - பணமிருக்குமிடம். உறையுள் - வசிக்குமிடம்.

### வினாக்கள்

விடை தருக :—

1. குருகுலக் கல்வி என்பது யாது ?
2. இந்துமத பாடசாலையின் நோக்கம் யாது ?
3. இப் பள்ளியின் பிற பகுதிகள் யாவை ?
4. வள்ளலார் இல்லத்தின் நோக்கம் என்ன ?
5. இவ்வில்லம் மாணவர்க்கு எவ்வண்ணம் பயன்படுகிறது ?
6. மாணவர் இல்லத்து வேலைமுறை யாது ?
7. இல்ல மாணவருடைய பணிகள் யாவை ?
8. மாணவர் இல்லம் எவ்வாறு நடத்தப்படுகிறது ?

### பயிற்சி

1. வேறுபாடு கூறுக :—

பல்லி—பள்ளி; அறிதல்—அரிதல்; விளங்கு—விலங்கு; குறல்—குறள்; வழி—வளி—வலி; விழி—விளி; காலை—காளை; தனி—தணி.

2. ஆறாவது பாராவில் உள்ள மூன்றாவது வாக்கியத்தைச் சிறு சிறு வாக்கியங்களாக ஆக்குக.
3. ஆசிரியருடன், பாலாற்றங்கரையில், நாட்டுப்பற்று, இடமிருத்தல், அமைந்திருக்கின்றன.—இவற்றைப் பிரித்துக் காட்டுக.

## இலக்கணம்

1. ல—ள—ழ இவற்றை உச்சரித்துப் பாருங்கள். வெல்லம், பள்ளம், ஆழம்—இச்சொற்களையும் ஒலித்துப் பாருங்கள்.

வெல்லம், வெள்ளம்; வல்லம், வள்ளம்; கல், கள்;—இவற்றின் பொருள் வேறுபாடுகளைக் கூறுக.

2. கழை - கரும்பு  தழை - இலை  வழி -
களை - நீக்கு  தளை - கட்டு  வளி - காற்று
கலை - கல்வி  தலை -  வலி - வலிமை

இடத்துக்கேற்றபடி எழுத்துக்களைப் பயன்படுத்தவேண்டும்.

3. வன்மை - வலிமை  தன்மை - ஒருவர் இயல்பு
வண்மை - கொடை  தண்மை - குளிர்ச்சி

இவற்றின் பொருள்களையும் அறிந்து எழுத்துக்களை உச்சரிக்க வேண்டும்.

4. கன்று—இது றன்னகரம் எனப்படும்.
கண்டு—இது டண்ணகரம் எனப்படும்.
பந்து—இது தந்நகரம் எனப்படும். ஏன்?

'ன்' என்னும் எழுத்து, கன்று என்பது போலப் பெரும்பாலும் றகரத்தோடு சேர்ந்து வரும். 'ண்' என்னும் எழுத்து 'கண்டான்' என்பது போல டகரத்தோடு தொடர்ந்து வரும். 'ந்' என்னும் எழுத்துப் பந்து, வந்து என்றாற்போலத் தகரத்துக்கு முன் வரும். ஆதலால் இவை முறையே றன்னகரம், டண்ணகரம், தந்நகரம் எனக் கூறப்படுகின்றன.

5. பின்வரும் சொற்களில் உள்ள பிழைகளைத் திருத்துக:—
கன்டான், செண்றுன், வன்தான், பன்து, வன்டி, சன்திரன்.

## 7. ஒட்டக்கூத்தரும் புகழேந்தியும்

1. ஏறத்தாழ எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் சோழனது அவைப் புலவராக இருந்தவர் ஒட்டக் **கூத்தர்**. இவர் விக்கிரம சோழன், இரண்டாம் குலோத்துங்கன், இரண்டாம் இராசராசன் ஆகிய மூன்று மன்னர்களுடைய ஆட்சிக் காலத்திலும் வாழ்ந்தார்; அவ்வரசருடைய அவைப் புலவராகவும் ஆசிரியராகவும் இருந்து புகழ்பெற்றார்.

2. விக்கிரமன், குலோத்துங்கன், இராசராசன் ஆகிய மூவர்மீதும் கூத்தர் தனித்தனி உலாப் பாடியுள்ளார்; 'குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ்' பாடினர்; தக்கயாகப்பரணி, ஈட்டி எழுபது முதலிய நூல்களைப் பாடிக் கவிச்சக்கரவர்த்தி என்னும் பட்டம் பெற்றார்.

3. கூத்தரிடம் விக்கிரம சோழன் பேரன்பு பூண்டிருந்தான்; தன் மகன் குலோத்துங்கனுக்குக் கல்வி கற்பிக்கும் பொறுப்பளித்தான்; பாண்டியன் மகளைத் தன் மகனுக்கு மனைவியாக்கவேண்டும் என்னும் தன் விருப்பத்தை அடிக்கடி கூத்தரிடம் வெளியிட்டான். ஆனால், இவ்வெண்ணம் முற்றுப் பெறுமுன் விக்கிரமன் உயிர் நீத்தான். எனவே, ஒட்டக்கூத்தர், குலோத்துங்கனுக்குப் பாண்டியன் மகளைப் பேசித் திருமணம் செய்துவைக்கும் கடமை உடையவரானர். அதற்காகக் கூத்தர் முயன்று சில அறிஞரை அழைத்துக்கொண்டு பாண்டி நாட்டுக் குச் சென்றார்.

4. அக்காலத்தில் **புகழேந்தி** என்னும் பெயருடைய புலவர் பெருமான் பாண்டியனின் அவைக் களப் புலவராயிருந்தார். அவர் பாண்டியன் மகளுக்கு ஆசிரியராகவும் இருந்தார். பாண்டியன் மகள்

மிகுந்த நுண்ணறிவு உடையவள்; விரைந்து பொரு ளுணரும் நிறைந்த ஆற்றல் உடையவள்; உணர்ச்சி மிக்கவள். எனவே, புலவர் பெருமகன் முறையாகக் கற்பித்த செந்தமிழ் நூல்களை நன்கு கற்றுத் திறமை அடைந்தாள்; இலக்கிய இலக்கணங்களில் மிகுந்த தேர்ச்சி அடைந்தாள்; இயற்கையிலே எழில் மிகுந்திருந்த இப் பெண்மணி கல்வியழகும் சேரப் பெற்றாள். மங்கைப் பருவம் எய்தியிருந்த தன் மகளுக்கு இசைந்த கணவன் எவனோ எனப் பாண்டியன் கவலை கொண்டான்.



பாண்டியன் அவையில் ஒட்டக்கூத்தரும் புகழேந்தியும்

5. அவ்வமயம் ஒட்டக்கூத்தர் தம் குழாத்தின ருடன் பாண்டியன் அவையை அடைந்தார். பாண் டியன் புலவர் பெருமானுக்கு முகமன் கூறி வரவேற் றான்; சோழநாட்டு வளம், குடிவளம், சோழன் நலம்

முதலியவற்றை வினவினன்; பின்பு வந்த காரணம் கேட்டான். ஒட்டக்கூத்தர், பாண்டியன் மனத்தை மகிழ்வித்து, அவன் பெண் மறுக்காதபடி செய்தல் வேண்டுமெனக் கருதி, சொற்களை அளவறிந்து அழகு பட, இனிய முறையில் உரையாடினர்; பின் தம் மன்னன் குலோத்துங்கனுக்குப் பெண் தருமாறு பாண்டியனிடம் கேட்டார்.

6. பாண்டியன் ஒட்டக்கூத்தரின் திறமையை அறிந்து தன்னுள் உவகை பூத்தான்; கூத்தரின் புலமையை மேலும் அறிந்து மகிழ ஆவல் கொண்டான். இதைக் குறிப்பால் உணர்ந்த புலவர் பெருமான் புகழேந்தியார், விளையாட்டுக் குறிப்பாக, புன்னகை பூத்த முகத்துடன் கூத்தரை நோக்கி, "செந்தமிழ்ப் புலவரே, எம் பாண்டிய மன்னர் மகளைக் கொள்ளத் தக்க ஏற்றம் சோழர்க்கு உளதோ?" என்று கேட்டார். உடனே கூத்தர் பாண்டியருக்கும் சோழருக்கும் உள்ள வேற்றுமையை வெளிப்படுத்தும் வகையில்,

"கோரத்துக் கொப்போ கனவட்டம் அம்மானை
கூறுவதுங் காவிரிக்கு வையையோ அம்மானை
ஆருக்கு வேம்புநிக ராகுமோ அம்மானை
ஆதித்த னுக்குநிகர் அம்புலியோ அம்மானை
வீரர்க்குள் வீரன்ஒரு மீனவனே அம்மானை
வெற்றிப்பு லிக்குடிக்கு மீன்கொடியோ அம்மானை
ஊருக்கு றந்தைநிகர் கொற்கையோ அம்மானை
ஒக்குமோ சோணாட்டைப் பாண்டிநா டம்மானை."

என்னும் ஒரு செய்யுளைப் பாடினர்.

7. இதைக் கேட்ட புகழேந்தியார் தன் மன்னன் புகழ், சோழன் புகழினும் சிறந்தது என்பதை எடுத்துக்காட்ட எண்ணி,

"ஒருமுனிவன் நேரியிலோ உரைதெரித்த தம்மானை
ஒப்பரிய திருவிளையாட் டுறந்தையிலோ அம்மானை
திருநெடுமால் அவதாரஞ் சிறுபுலியோ அம்மானை
சிவன்முடியில் ஏறுவதும் செங்கதிரோ அம்மானை
கரையெதிரே டேறியதுங் காவிரியோ அம்மானை
கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ அம்மானை
பரவைபணிந் ததுஞ்சோழன் பதந்தனையோ அம்மானை
பாண்டியனுர் பராக்கிரமம் பகர்வரிதே அம்மானை."

என்னும் செய்யுளைப் பாடினுர்.

8. புலவர் பெருமக்கள் இருவரது சொற்போரில் உள்ளம் மகிழ்ந்த பாண்டியன் சோழனுக்குப் பெண் கொடுக்கத் தன் உடன்பாட்டை வெளியிட்டான். பிறகு திருமணத்திற்கான நாள் குறிக்கப்பட்டு ஆவன செய்யப்பட்டன. சோழன் மதுரை சென்று பாண்டியன் மகளை மணந்துகொண்டு, சின்னுட்கள்வரை அங்கிருந்த பின், தன்நாடு புறப்பட்டான். புகழேந்தியாரும் பாண்டியன் மகளுக்குத் துணையாக அவர்களுடன் சென்றுர்.

### அருஞ்சொற்பொருள்

தக்கயாகப்பரணி - தக்ஷன் செய்த யாகத்தைப்பற்றிக் கூறும் பரணி என்னும் பிரபந்தம். பிரபந்தம் - சிறு நூல் வகை. ஈட்டி எழுபது - ஈட்டியைச் சிறப்பித்துக் கூறும் எழுபது பாடல்களைக் கொண்ட நூல். கோரம் - சோழன் குதிரை. கனவட்டம் - பாண்டியன் குதிரை. ஆர் - ஆத்தி. ஆதித்தன் - சூரியன். அம்புலி - சந்திரன். உறந்தை - உறையூர். தாதகி - ஆத்தி. கண்ணி - மாலை. பரவை - கடல்.

### வினுக்கள்

விடை தருக:—

1. ஒட்டக்கூத்தர் என்பவர் யார்?
2. கூத்தர் சிறந்தவர் என்பது எப்படி விளங்குகிறது?
3. கூத்தர் சோழனுக்குப் பெண்பார்க்கச் சென்றது ஏன்?
4. புகழேந்தி என்பவர் யாவர்?

5. சோழனுக்கும் பாண்டியனுக்கும் கூத்தர் காட்டும் வேற்றுமைகள் யாவை?

6. சோழனைவிடப் பாண்டியன் சிறந்தவன் என்பதைப் புகழேந்தி எவ்வாறு விளக்குகிறார்?

## பயிற்சி

1. உயிர் நீத்தான், மாண்டான், இறந்தான் என்பவை ஒரே பொருளில் வரும் சொற்கள். இவற்றைப் போன்று ஒரே பொருள் தரும் வேறு சொற்கள் ஐந்தினைக் கூறுக.

2. கீழ் வருவனவற்றுள் எழுவாய், பயனிலை, செயப்படு பொருள்களைப் பொருத்தமாகச் சேர்த்து எழுதுக :—

| | | |
|---|---|---|
| சோழன் | செந்தமிழ் நூல்களை | அடைந்தார் |
| புகழேந்தி | குலோத்துங்கனை | கற்றுத்தேர்ந்தாள் |
| கூத்தர் | பாண்டிய நாடு | பூண்டிருந்தான் |
| பாண்டியன்மகள் | கூத்தரிடம் அன்பு | மாணவராக ஏற்றார் |

## இலக்கணம்

அரம் — ஒரு கருவி குரவர் — பெரியோர்
அறம் — தருமம் குறவர் — மலையில் வாழும் குறச் சாதியார்.

மரம் — மரம் நிரை — வரிசை திரை — அலை
மறம் — பாவம் நிறை — எடை திறை — கப்பம்

இவ்வாறு ர, ற என்னும் எழுத்துக்கள் பொருளில் வேறுபடுகின்றன. ஆதலால் அவற்றை இடமறிந்து பயன்படுத்த வேண்டும்.

இவ்வாறு ர, ற வந்துள்ள சொற்களை முதல் 6 பாடங்களிலிருந்து எடுத்துப் பொருளுடன் எழுதுக.

# 8. மங்கோ பார்க்–I

## அங்கம் 1

இடம் : ஆப்பிரிக்காவில் மூர் நாடு—எல்லைப்புறம்.

காலம் : விடியற்காலை.

பாத்திரம் : மங்கோ பார்க், காவலர், பொதுமக்கள்.

### களம்–1

[மங்கோ பார்க், மூர்நாட்டு எல்லைக்குப் புறத்திலே முகாமடித்துத் தங்கி, அந்நாட்டுவழியே சென்று நைஜர் ஆற்றை அணுக, அந்நாட்டு மன்னனிடம் அனுமதி வேண்டியிருந்தார். மூர் மன்னனிடமிருந்து ஆட்கள் தம் முகாமை நோக்கி வருவதைக் கண்டு பார்க் மகிழ்ந்து அவர்களை வரவேற்கிறார்.]

**மங்கோ பார்க்:** வாருங்கள் தூதர்களே, உங்களுக்கு நல்வரவும் வணக்கமும் கூறுகின்றேன்.

**காவலர்:** வணக்கம்; உங்களுக்கு எங்கள் வாழ்த்து உரியதாகுக.

**மங்:** என்னுடைய வேண்டுகோளுக்குத் தங்கள் மன்னர் இணங்கினாரா? தங்கள் வரவு என் எண்ணத்தை நிறைவேற்றிவைக்குமா?

**கா:** அச்சமேன் தோழரே! தங்கள் வேண்டுகோளை எங்கள் மன்னர் கண்டார்; மகிழ்ந்தார். தங்களை நேரிற் காண விரும்பி அழைத்துவரச் சொன்னார். தாங்கள் உடனே வந்தால் தங்கள் எண்ணம் முற்றுப் பெறுவது உறுதி.

**மங்:** மகிழ்ச்சி; அப்படியே செய்கிறேன். இதோ புறப்படுகிறேன். உங்கள் மன்னரின் கருணையே கருணை.

[மங்கோ பார்க் இரு கழுதைகள்மீது தம் உடைமைகளை ஏற்றிக்கொண்டு, தம்மையழைக்கவந்த காவலர்களுடன் மூர் அரசனை நேரிற் காண்பதற்காகப் புறப்பட்டுச் செல்கிறார்.]


ஆப்பிரிக்காவில்
மங்கோ பார்க்
கண்டவை
சஹாரா
பாலைவனம்
அட்லாண்டிக் பெருங்கடல்
செனிகல் ஆறு
மூர் நாடு
டிம்பக்டு
கார்ட்டா
செகோ
நைஜர் ஆறு
காம்பியா
கினிகுடா

## களம்–2

[மூர் நாட்டுத் தெருவழியே மங்கோ பார்க் காவலருடன் செல்கிறார். மூர் மக்கள் மங்கோபார்க்கைக் கண்டு மிரளுகின்றனர்.]

ஒரு மூர் : (துணிவுடன் நெருங்கிவந்து) ஐயா, நீர் யார்? எங்கள் நாட்டுக் காவலருடன் நீர் எங்குச் செல்கின்றீர்?

மங் : ஐயா, நான் ஆங்கிலேயன். உங்கள் நாட்டிலுள்ள நைஜர் ஆற்றைப் பார்ப்பதற்காக வந்துள்ளேன்.

மற்றொரு மூர் : நைஜர் ஆற்றைப் பார்க்கவா இவ்வளவு தொலை வந்தீர்? உங்கள் ஊரில் ஆறுகளே இல்லையோ?

மங் : எங்கள் ஊரிலும் ஆறுகள் உண்டு. ஐயா, ஆனால் நைஜரைப் போலப் பெரிய ஆறுகள் இல்லை.

மற்றொரு மூர் : அப்படியானால் சாக்கடை போன்ற சிறு ஆறுகள் இருக்கின்றனவோ?

மீண்டும் ஒருவன் : நல்ல ஆளையா நீர்; ஆற்றைப்பார்க்க இத்துணைத் தொலை வந்தேன் என்கிறீரே, புளுகினாலும் பொருந்தப் புளுகக்கூடாதா?

முதல் மூர் : அட, சிங்கம் பார்க்க வந்தேன், யானை பார்க்க வந்தேன் என்றெல்லாம் சொல்லக் கூடாதா?

மற்றொருவன் : ஆளைப்பார்த்தால் அடிமை வணிகனைப் போன்றில்லையா அண்ணே!

வேறொருவன் : ஒரு வேளை தந்தங்களையும் தங்கங்களையும் நம் நாட்டிலிருந்து வாரிக்கொண்டு போக வந்தவனா?

மங் : அப்படியெல்லாம் ஒன்றுமில்லையப்பா! நான் ஒரு பாதிரி. தங்கமும் தந்தமும் எனக்கேன்? அடிமை வாணிகம் என் கொள்கைக்கே முரணானதப்பா!

**ஒரு யூர் பெண் :** (மற்ருெருத்தியை நோக்கி) அடி சலிமா, இவன் என்ன 'மைதா' மாவினுற்செய்த பதுமையோ !

**மற்ருெருத்தி :** இல்லையடி, சுண்ணும்புக் கட்டியால் செய்த சுந்தரப்பதுமையடி இது.

**ஒரு சிறுமி :** இல்லையக்கா, இந்த மனிதன் சுண்ணும்படித்துக்கொண்டு வந்திருக்கிருன். நம் வீட்டுக்குச் சுண்ணும்பு அடிக்கிருேமே அதுபோல. இவன் தலைமுடி உள்பட உடம்பெல்லாம் சுண்ணும் படித்துக் கொண்டான்.

**மற்ருெரு சிறுமி :** இல்லையடி, இது மரப் பதுமையுமன்று ; சுண்ணும்பினுலான சுந்தரப் பதுமையுமன்று ; சுண்ணும்படித்துக்கொண்டு வந் திருக்கும் மனிதனுமல்லன். இது ஒரு வெள்ளைப் பேய். வெள்ளைப் பேய்களைப்பற்றி எங்கள் ஆசிரியர் பல கதைகள் கூறியிருக்கிருர். இந்த வெள்ளைப் பேய் களும் பூதங்களும் சுண்ணும்பால் செய்யப் பட்டிருக்குமாம் ; தலைமயிர்கூடக் கற்ருழை நாராக இருக்குமாம் ; பூனையின் கண்களே இப்பேய்களின் கண்களாம். இவை கால்களையும் கைகளையும் பெரிய துணிக்குழாய்களுக்குள் விட்டுக்கொண்டிருக்குமாம் ; பாதங்களைத் தோலால் செய்த சட்டிக்குள் விட்டுக் கொண்டிருக்குமாம். தலையில் சுண்ணும்பு பூசிய சட்டியைக் கவிழ்த்துக்கொண்டிருக்குமாம்.

**மற்ருெருத்தி :** அடியே, நீ சொன்னவை அனைத்தும் இந்தப் பேய்க்குப் பொருந்தியிருக் கின்றன. இது வெள்ளைப் பேய்தாண்டி.

[மற்றப் பெண்களும் குழந்தைகளும் அச்சத்தால் கூச்சலிட்டுக் கொண்டு பாய்ந்தோட முயல்கின்றனர்.]

மங் : தாய்மார்களே, தங்கைகளே, நான் பேயு மல்லேன் ; பூதமுமல்லேன். உங்களைப் போலவே நானும் மனிதன் தான். எங்கள் நாட்டு மனிதர்கள் அனைவரும் வெண்மையாகத்தான் இருப்பார்கள். என்னைக்கண்டு நீங்கள் அஞ்ச வேண்டா.

[பெண்களுள் ஒருத்தி, சற்றுத் துணிவு பெற்று அருகில் வந்து கையைக் கிள்ளிப் பார்க்கிறாள். மற்றப் பெண்களும் அருகில் வந்து மங்கோ பார்க்கைத் தொட்டும் முகத்தை விரலால் தேய்த்தும், நகத்தால் சுரண்டியும் பார்த்து, அவன் மனிதனே என்று முடிவு செய்கின்றனர்.]

## அங்கம் 2

இடம் : மூர் மன்னன் அலீயின் அரண்மனை.

காலம் : மாலை.

பாத்திரம் : மங்கோ பார்க், மன்னன் அலீ, காவலர்.

### களம்–1

[மன்னர் அலீயின் அவைக்கு மங்கோ பார்க் அழைத்து வரப்படுகிறார். மன்னன் அரியாசனத்தின்மீது கம்பீரமாக அமர்ந்து பார்க்கை உற்றுக் கவனிக்கிறான். மங்கோ பார்க் மன்னனைத் தகுந்த முறையில் வணங்கி நிற்கிறார்.]

அலீ : (மங்கோ பார்க்கைப் பார்த்து), ஐயா, நீர் ஏன் இந்த நாட்டில் சுற்றிக்கொண்டிருக்கிறீர் ?

மங் : நைஜர் ஆற்றைப் பார்க்க வேண்டும் என்னும் அவாவினால் நான் இங்கே வந்தேன்.

அலீ : என்ன ! ஓர் ஆற்றைப் பார்ப்பதற்காகவா இவ்வளவு தொலை ஒருவன் வருவான் ? நீர் எம்மதத்தினர் ?

மங் : நான் கிறிஸ்துவ சமயத்தைச் சேர்ந்தவன் ; அச்சமய வேதாகமங்களைப் படித்துச் சமய போதகனாக உள்ளவன்.

அலீ : சரிதான். இது முஸ்லிம் நாடு. இங்கு உளவறிந்து போகவே நீர் வந்திருக்கிறீர். அதனால்

தான் தகுந்த காரணம் கூற முடியாமல் ஆற்றைப் பார்த்துவிட்டுப் போக வந்ததாகக் கூறுகிறீர்.

**மங் :** இல்லை மன்னரே, தாங்கள் கூறுவது சரியன்று. நான் உளவாளியல்லன் ; உண்மையில் ஆற்றைப் பார்க்கவே வந்துள்ளேன்.

**அலீ :** காவலர்களே, இவனைப் பிடித்துக் கட்டிச் சிறையில் தள்ளுங்கள் ! இவன் உண்மையில் உளவாளியே. இவன் உடைமைகளைப் பறிமுதல் செய்யுங்கள் !

[காவலர் மங்கோபார்க்கைச் சிறைக்கு இழுத்துச் செல்கின்றனர்.]



## களம்–2

[அலீயின் அந்தப்புரம்—அரசியுடன் ஆலோசனை.]

**அலீ :** பாத்திமா, செய்தி தெரியுமா ? ஒரு பேரிடையூற்றிலிருந்து இன்று நம் நாட்டை மீட்டு விட்டேன்.

**பாத் :** அரசே, என்ன அத்தகைய பேரிடையூறு ! வீராதி வீரரான தாங்கள் ஆளும் நாட்டிற்குமா இடையூறு ? இது என்ன பித்துப் பிடித்த பேச்சு ! என்ன நடந்தது ? விவரமாகச் சொல்லுங்கள்.

**அலீ :** கேள் பாத்திமா, ஒரு கிறிஸ்துவ சமய குரு இங்கு வந்து நம்மிடம் சிக்கிக்கொண்டான். சமயப் பிரசாரம் செய்யும் வேடத்தில் அவன் நம் நாட்டைப் பற்றி உளவறிந்து போக வந்தவன் என்பது தெரிகிறது. அவனை நேரிற் கேட்டால், நைஜர் ஆற்றைப் பார்க்க வந்ததாகக் கூறுகிருன்.

**பாத் :** உளவாளியாகத்தான் இருக்கட்டுமே ! இங்கு உளவறிந்து சென்று அவன் நம்மை என்ன செய்துவிட முடியும் ?

அலீ: அங்ஙனமன்று பாத்திமா! அவன் உளவறிந்து சென்று, பின் தன் நாட்டிலிருந்து பெரிய படையைத் திரட்டி வந்து நம்முடன் போருக்கு நின்ருல் நாம் என்ன செய்வது! இடையூறு வளர ஒட்டாமல் முளையிலேயே கிள்ளிவிட வேண்டாவா? ஒன்று அவன் தலையை வெட்டிவிட வேண்டும்; அல்லது கைகளையும் கால்களையும் வெட்டி முடவ ஞக்கி விட்டுவிடவேண்டும்; அல்லது கண்களைப் பிடுங்கிக் குருடனுக்கித் துரத்தி விடவேண்டும்; அல்லது இங்கு அடிமையாக்கி நம்மிடம் கடினமான தொழில்களைச் செய்யப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். நீ என்ன சொல்கிருய்?

பாத்: இருக்கட்டும்; அவன் உளவாளிதான் என்பதை மெய்ப்பிக்கத் தக்க சான்றுகள் கிடைத் தனவா? தான் உளவாளிதான் என்று அவன் ஒப் புக்கொண்டானு? ஒரு வேளை உண்மையிலேயே உளவாளியாயிராமல், ஆற்றைப் பார்க்கவந்த வெகுளி யாயிருந்தால்! அத்தகைவனை நாம் கடுமை யாகத் தண்டித்துவிட்டால் அரச நீதி பங்கப்பட்டு விடுமல்லவா? ஆய்ந்தோய்ந்து பாராமல் எதையும் அவசரப்பட்டுச் செய்யலாமா?

அலீ: அப்படியானல் அவன் குற்றமற்றவன் என்கிருயா நீ?

பாத்: ஆத்திரங் கொள்ள வேண்டா; நேரிற் சென்று விசாரிப்போம். பிறகு செய்ய வேண்டு வதைச் செய்வோம்.

அலீ: வா, சிறைக்குச் செல்வோம். நீயே விசாரித்துப் பார்.

[அலீ, பாத்திமா இருவரும் அரசாங்க மொழி பெயர்ப்பாளனை அழைத்துக்கொண்டு சிறைக்குச் செல்கின்றனர்.]

## அருஞ்சொற்பொருள்

அச்சம் - பயம். முற்றுப்பெறுவது - முடிவுபெறுவது, நிறைவேறுவது. பாதிரி - கிறித்தவ சமய போதகர். சுந்தரம் - அழகு. அவை - சபை. அரியாசனம் - அரசன் அமரும் பீடம். அவா - ஆசை. போதகன் - கற்பிக்கிறவன். பேர் இடையூறு - பெருந் துன்பம். வெகுளி - ஆழ்ந்த அறிவற்றவன். முரணனது - மாறுனது.

## வினுக்கள்

விடை தருக :—

1. மங்கோ பார்க் மூர் மன்னனிடம் வேண்டிய அனுமதி யாது?

2. ஆற்றைப் பார்க்க வந்ததாக மங்கோ பார்க் கூறியதை மூர்கள் நம்பாதது ஏன்?

3. மூர் பெண்கள் இவரைக் கண்டு என்னென்ன எண்ணினர்?

4. மூர் மன்னன் மங்கோ பார்க்கைச் சிறையிலிட்டது ஏன்?

5. அலீ பார்க்கை எங்ஙனம் தண்டிக்க விரும்பினுன்?

6. பாத்திமா இவரைத் தண்டிக்க விரும்பாததற்குக் காரணம் யாது?

## பயிற்சி

1. சொற்றெடர்களில் அமைக்க :—வாழ்த்து உரியதாகுக, நிறைவேற்றிவைத்தல், முற்றுப்பெறுவது, வாரிக்கொண்டு, அஞ்ச வேண்டா, துணிவுபெற்று, பேரிடையூறு, மூளையிலேயே கிள்ளி விடுதல்.

2. எதிர்ச்சொற்கள் தருக :—மகிழ்ந்து, அச்சம், நேரில், வீரன், கடுமை, அவசரம்.

## இலக்கணம்

1. அது பெரிய ஆறு அன்று.—இதில் அன்று என்பது ஒன்றன்பால் வினைமுற்று.

அவை பெரிய ஆறுகள் அல்ல.—இதில் அல்ல என்பது பலவின்பால் வினைமுற்று.

2. பின்வரும் கோடிட்ட இடங்களில் பொருத்தமான வினை முற்றுக்களை அமைக்க :

(1) அது பார்க்கின் பெட்டி ———. (அன்று, அல்ல)
(2) அவை பார்க்கின் பெட்டிகள் ———. ,,
(3) அது உன் வண்டி ———. ,,
(4) அவை உன் வண்டிகள் ———. ,,

3. ஆறு + ஐ, அச்சம் + ஏன், நாட்டில் + உள்ள, என்று + எல்லாம், மனிதனும் + அன்று—இவற்றைச் சேர்த்து எழுதுக.

4. (1) தமிழில் பிற மொழிச் சொற்கள் பல கலந்திருக்கின்றன. அவற்றுள் பழமையானவை சம்ஸ்கிருத சொற்களே—வருஷம், கஜம், விருக்ஷம், புஸ்தகம், கிருஹம் முதலியவை சம்ஸ்கிருதச் சொற்களே. ஜ, ஸ, ஷ, க்ஷ, ஹ—இவை சம்ஸ்கிருத எழுத்துக்கள்.

(2) பாதிரி, அலமாரி, சன்னல், கிராம்பு முதலியவை, போர்ச்சுகீசியர் தமிழ்நாட்டில் தங்கி வாணிகம் செய்த காலத்தில் தமிழிற் கலந்தவை.

(3) தயார், சிபாரிசு, சுமார், முன்சீபு, ஜமீன்—முதலியவை மொகலாய ஆட்சியின் பயனாகத் தமிழில் கலந்த பாரசீகச் சொற்கள்.

இவை வேறு பல திசைகளிலிருந்து வந்து தமிழ் மொழியில் வழங்குவதால், இவற்றுக்குத் திசைச் சொற்கள் எனப் பெயர் வழங்குகிறது.

5. பின்வருபவை என்னென்ன சொற்கள் என்று பிரித்தெழுதுக : வஸ்திரம், ஜம்பம், ஜமீன், சிபாய், மிருகம், ரிஷபம், சாவி, ஸரஸ்வதி, ரஸ்தா, பந்தோபஸ்து, மேஜை, தமாஷ், கஷ்டம், இஷ்டம், அபிப்பிராயம்.

# 9. மங்கோ பார்க்–II

## அங்கம் 3

**இடம் :** சிறைச் சாலே.

**காலம் :** இரவு.

**பாத்திரங்கள் :** மங்கோ பார்க், மன்னன் அலீ, அரசி பாத்திமா, சிறைக் காவலர் இருவர், அரசாங்க மொழி பெயர்ப்பாளர்.

### களம்–1

[மங்கோ பார்க் வருத்தத்துடன் சிறையில் சிந்தித்தவாறு உலவிக் கொண்டிருக்கிருர் ; அரசனும் அரசியும் தம்மை நோக்கி வருவது கண்டு, இருவருக்கும் வணக்கம் செலுத்துகிருர்.]

**அலீ :** கைதியே, அரசியார் கேட்கும் கேள்விகட்கு உண்மையை ஒளியாமல் விடை கூறுதல் வேண்டும் ; இல்லேயெனில் உன் தலே தரையில் உருளும்.

[மங்கோ பார்க் இருவரையும் பார்த்த வண்ணம் பேசாமல் நிற்கிருர்.]

**பாத் :** ஐயா, நீர் எந்நாட்டினர் ? அனுமதியின்றி இந்நாட்டிற்குள் எப்படி வந்நீர் ? இது சட்ட விரோதம் என்பதும் அநாகரிகச் செயல் என்பதும் உமக்குத் தெரியாதா ?

**மங் :** அரசியே, எனக்கு நன்ருகத் தெரியும். இங்கிலாந்தைச் சேர்ந்த செல்கர்க்கில் பிறந்த நான் இந்நாட்டிற்குள் அனுமதியின்றிப் புகவில்லே. 1795-ஆம் ஆண்டு மே திங்களில் என் நாட்டை விட்டுப் புறப்பட்டுக் காம்பியா துறைமுகம் வந்து சேர்ந்தேன். அங்குச் சில நாட்கள் தங்கியிருந்து, பின் காம்பியா

ஆற்றுக்கும் செனகல் ஆற்றுக்கும் இடையில் உள்ள அடர்ந்த காடுகள் வழியே கார்ட்டா நாடு வந்தேன்; அந்த நாட்டு அரசரால் விருந்தோம்பப் பட்டேன்; பின் அந்நாட்டு எல்லேயிலிருந்த வண்ணம் இந்நாட்டிற்குள்வர அனுமதி கொடுக்குமாறு மன்னருக்கு வேண்டுகோள் அனுப்பியிருந்தேன்.

அலீ: (இடைமறித்து) ஆம்; இவன் வேண்டுகோளேப் பார்த்த நான் ஐயங்கொண்டேன். அனுமதி தருவதாக இவனே அழைத்து வருமாறு நம் ஆட்களே ஏவினேன். நம் ஆட்கள், நான் அனுமதி தர அழைத்து வருவதாகக் கூறி, இவனே இங்கு அழைத்துவந்தனர்.

பாத்: நீர் உண்மையில் ஆற்றைப்பார்க்க வந்தீரா? உளவு பார்க்க வந்தீரா? அடிமைகள் பிடிக்க வந்தீரா? யானைத் தந்தங்களேயும் அபரஞ்சித் தங்கத்தையும் அள்ளிக்கொண்டு போக வந்தீரா? சமயப் பிரசாரம் செய்ய வந்தீரா? உம் இறைவன்மீது ஆணேயிட்டுக் கூறும்.

மங்: பெருமை மிக்க அரசியாரே, நான் வணங்கும் ஆண்டவன்மீது ஆணேயாகக் கூறுகிறேன். தாங்கள் கூறிய எதனே முன்னிட்டும் நான் வரவில்லே. நைஜர் ஆறு மிகப்பெரிய ஆறென்றும், அது பேரிரைச்சலிட்டு ஓடும் காட்சி, சிங்கம் தன் இரைமீது பாய்வதைப் போன்றிருக்குமென்றும், அதன் நீர் பளிங்கு போல் விளங்குமென்றும் கேள்விப்பட்டேன்; அதனேக் காண அவாக் கொண்டேன்; உடனே புறப்பட்டு வந்தேன். இந்நாட்டின் வேறு அரசர்கள் என்னே விருந்தினனுக ஏற்று உபசரித்து வழி கூட்டியனுப்பி வைத்தார்கள். இந்த மன்னர் மட்டுமே என் மீது ஐயங் கொண்டார்.

**பாத் :** சரி இருக்கட்டும். உம்மையும் உம் உடைமைகளையும் சோதித்துப் பார்க்க வேண்டும். உம்மிடமுள்ள கடிதங்களை நான் பார்வையிடல் வேண்டும்.

**மங் :** அருள் மிக்க பெருமாட்டியே, அங்ஙனமே செய்யுங்கள்.

[காவலர்கள் மங்கோ பார்க்கின் உடைகளைச் சோதித்து அவரிடமிருந்த கடிதங்களை யெல்லாம் எடுத்துக் கொடுக்கின்றனர். அலீயும் பாத்திமாவும் அவற்றைப் பெற்றுக் கொண்டு அந்தப்புரம் திரும்புகின்றனர்.]

## களம்–2

[அந்தப்புரத்தில் அரசியும் அரசனும் அரசாங்க மொழி பெயர்ப்பாளருடன் மங்கோபார்க்கிடமிருந்து எடுத்து வந்த கடிதங்களை யெல்லாம் பிரித்துப் படித்து ஆராய்கின்றனர்.]

**பாத் :** அரசே, இதோ பாருங்கள்! இது நாட்டின் குறிப்புப் படம். இதில் அந்த ஆளின் நோக்கம் நன்கு விளங்குகிறது. அவன் நம் நாட்டில் காம்பியா துறைமுகத்தில் இறங்கி, நைஜர் ஆற்றுக்குப் போகும் வழியைக் குறித்திருக்கிறான். அவன் செல்ல வேண்டும் இறுதி இடம் நைஜர் ஆறு என்பது இப்படத்திலிருந்து தெளிவாகத் தெரிகிறது.

**அலீ :** எங்கே, பார்ப்போம்!

[பாத்திமா, படத்தைக் காட்டி அதில் மங்கோ பார்க் குறிப்பிட்டு வரைந்திருந்த வழிகளைக் காட்டுகிறாள்.]

**அலீ :** சரி; மொழி பெயர்ப்பாளரே, அக் கடிதங்களில் ஏதாவது துப்புக் கிடைத்ததா?

**மொழி :** ஆம்; பெருமானே, நம்மிடம் சிக்கியுள்ளவன், புதிய புதிய நாடுகளைக் கண்டு, அந்நாடுகளின் இயற்கைச் செல்வங்களைப் பார்த்து மகிழும் பித்தன். ஆறுகள், மலைகள், காடுகள் முதலியவற்

றினைக் கண்டு களிப்பதில் இவனுக்கு அவா மிகுதி என்று இக் கடிதங்களிலிருந்து தெரிகிறது. நைஜர் ஆற்றைக் கண்டுபிடித்து அது எங்கிருந்து உற்பத்தி யாகிறதோ அங்குச் சென்று, அது எவ்வளவு அகல மாகப் புறப்படுகிறது என்பதைப் பார்த்து, பிறகு அது எங்கெல்லாம் பாய்ந்து செல்கிறதோ, அங் கெல்லாம் சென்று, அது கடலில் கலக்குமிடத்தைக் கண்டு மகிழ வேண்டும் என இவன் அவாக் கொண்டவன் என்பது இக் கடிதங்களிலிருந்து தெளிவாக அறியக் கிடக்கிறது.

பாத் : சரிதான் ; இது ஒரு வகை மதப்பித்தம். மக்களுட் சிலர் ஆற்றைக் கடவுளாக வணங்கு கிறார்கள் என்பதை நாம் கேட்டதில்லையா ? அது போல இது ஒருவகைப் பித்தம்.

அலீ : அங்ஙனமாயின் இவன் குற்றவாளி அல்லன் என்பது உன் கருத்தா, பாத்திமா ?

பாத் : ஆம் கணவரே, குற்றமற்றவனைத் தண் டித்தல் அரச நீதிக்கு இழுக்கு. எனவே, இந்தப் பித்தனை இவனுடைய கழுதைகளுடனும் உடைமைக ளுடனும் இந்த இருட்டிலேயே விரட்டி விடுங்கள். இயற்கையழகைக் கண்டாவது களிக்கட்டும் ; இல்லா விட்டால் இந்நாட்டு விலங்குகளுக்காவது இரை யாகட்டும். உயிருடனிருந்தால் ஆற்றையாவது போய்க் காணட்டும். அல்லது ஆற்றோடாவது போகட்டும். நமக்கென்ன வந்தது ! குற்றமற்ற வனைத் தண்டித்த பழி நமக்கேன் ?

அலீ : சரி பாத்திமா, உன் விருப்பம் நிறை வேறட்டும். மொழிபெயர்ப்பாளரே, காவலரிடம் நம் ஆணையென்று கூறி, இப்போதே அந்தப் பித்தனை விடுதலை செய்து, அவன் உடைமைகளுடன் அவனை

நம் நாட்டு எல்லேக்கப்பால் கொண்டுபோய் விட்டு வரச் சொல்லுவீராக. பொழுது விடிவதற்குள் அவனே நம் நாட்டு எல்லேக்கப்பால் கொண்டுபோய் விட வேண்டும். போம்!

[மொழிபெயர்ப்பாளர் உடனே சென்று சிறையதிகாரியிடம் அரசன் ஆணையைக் கூறுகிருன். சிறையதிகாரி மங்கோ பார்க்கை விடுவித்து ஒரு காவலனே உடன் அனுப்பி, நாட்டு எல்லேக்கு அப்பால் கொண்டுபோய் விட்டுவிடச் செய்கிருன்.]

## அங்கம் 4

**இடம் :** மூர்நாட்டு எல்லேக்கு வெளியே.

**காலம் :** விடியற்காலே.

**பாத்திரம் :** மங்கோ பார்க், காவலன்.

### களம்–1

**காவலன் :** ஐயா, இது எங்கள் நாட்டு எல்லேக்குப் புறம்பான இடம். இனி நீர் எங்கு வேண்டுமாயினும் போகலாம். உமக்கு இனி விடுதலேதான். ஆனல், மீண்டும் எம் நாட்டிற்குள் காலடி எடுத்து வைத்தால் தொலேந்தீர். தெரிகிறதா?

**மங் :** அன்பு மிக்கவரே, நான் மீண்டும் உம் நாட்டில் காலடி வைத்துத் துன்பத்திற்கு ஆளாக மாட்டேன். ஆனல் உம்மிடம் ஓர் உதவி கேட்க விரும்புகிறேன். செய்வீரா? ஆண்டவன் உமக்கு நல்லுதவி செய்வான்.

**காவ :** என்ன ஐயா வேண்டும்?

**மங் :** நைஜர் ஆற்றுக்குப் போகும் வழியை மட்டும் கூறினல் போதும்.

**காவ :** இங்கிருந்து நேர் கிழக்கே செல்லும் ஐயா! பம்பாரா என்னும் இடத்தை அடைவீர். அங்

கிருந்து செஜோ எனும் ஊருக்கு வழி கேட்டுச் செல்லும். செஜோவுக்கு ஐந்து கல் தொலைவில் ஒரு பெரிய ஆறு பேரிரைச்சலுடன் பாய்வதைக் காண்பீர். அதுதான் நைஜர் ஆறு. நான் போகிறேன். மீண்டும் மூர் நாட்டுக்குள் வந்துவிடாதீர். இனி மூர் நாட்டிற்குள் காலடி வைத்தால் உம் உடல் சிங்கத்துக்கு விருந்தாகும். தெரிகிறதா !

[என்று கூறியவன் தன்னுள்ளாக]

பித்தன் ; ஆற்றைப் பார்க்கும் ஒரே எண்ணம் தவிர, வேறொன்றையும் விரும்பாத பைத்தியம். இந்த நாட்டில் எவ்வளவு தங்கம் இருக்கிறது ; எவ்வளவு இரத்தினங்கள் இருக்கின்றன ; ஒன்றையும் இவன் சட்டை செய்யவில்லையே ! ஆற்றைப் பார்க்கப் போகிறானும் அரைப் பித்தன். ஆற்றில் என்ன தங்கக் கட்டியா உருளுகிறது ! தண்ணீர்தான் பாய்கிறது. அதைப் போய்ப் பார்ப்பதேன் ? அதற்காக இத்துணைப் பெரும் இடையூறுகளிடையே ஆயிரக் கணக்கான கல் தொலையைக் கடந்து பயணம் செய்வது ஏன் ? முழுக் கிறுக்கன். தொலையட்டும். எக்கேடாவது கெடட்டும்.

(போய்விடுகிறான்)

**மங் :** ஆண்டவனே, உன் கருணைக்கு நன்றி. பெரும் இடையூற்றினின்று என்னைக் காத்த இறைவா, இதோ உம் அருளுக்கு நான் பணிகிறேன்.

[இறைவனை வணங்கிப் பின் எழுந்து செஜோவை நோக்கிப் பல நாட்கள் நடந்து, பல இடங்களைச் சுற்றிச் சென்று நைஜர் ஆற்றை அணுகினர். அதைக் கண்டதும் மகிழ்ச்சிப் பெருக்கால்]

**மங் :** இதோ என் எண்ணம் நிறைவேறி விட்டது. கண்டுவிட்டேன் நைஜர் ஆற்றை. இரண்

டரை ஆண்டுகளாகப் பட்ட பாடு பலனளித்து விட்டது. என்ன அழகான ஆறு! எவ்வளவு இரைச்சலுடன் பாய்ந்தோடுகிறது! எவ்வளவு தெளிவான பளிங்கு போன்ற நீர்! இறைவனே, கருணைக் கடலே, அருட்குன்றே, என் அன்பே, உன்னை என்னவென்று தான் போற்றுவேன்!

[நைஜர் ஆற்றில் மங்கோபார்க் இறங்கி, அவ்வாற்று நீரை அள்ளி யள்ளிப் பருகி, மகிழ்ச்சி ததும்ப இறைவனை வழிபடுகிறார். பின் அவ்வாற்றின் போக்கைச் சற்றுத் தொலைவரை சென்றறிந்து தம் தாய்நாடு புறப்படுகிறார்.]

### அருஞ்சொற்பொருள்

அபரஞ்சி - கலப்பில்லாத தூய தங்கம். விருந்தோம்புதல் - உபசரித்தல். ஐயம் - சந்தேகம். துப்பு - மர்மம். இழுக்கு - குற்றம். புறம்பான - வெளியான. கிறுக்கன் - தெளிவான அறிவற்றவன். ஏவினேன் - கட்டளையிட்டேன், அனுப்பினேன். சட்டை செய்தல் - பொருட்படுத்தல்; இஃது உலக வழக்குச் சொல்.

### வினாக்கள்

விடை தருக :—

1. சிறையில் அரசிக்கும் பார்க்குக்கும் நடந்த உரையாடல் மூலம் வெளிவந்த உண்மைகள் யாவை?
2. மங்கோ பார்க் பித்தன் எனப்பட்டது ஏன்?
3. பார்க்கை விடுவிக்க, பாத்திமா எடுத்துக் காட்டிய காரணங்கள் யாவை?
4. பார்க் எவ்வண்ணம் விடுதலை செய்யப்பட்டார்?
5. பார்க்கை முழுக்கிறுக்கன் என்று கருதியவர் எவர்? ஏன்?
6. பிறகு, மங்கோ பார்க் நைஜர் ஆற்றை எங்ஙனம் அணுகினார்?

### பயிற்சி

1. மங்கோ பார்க் நாடகத்தை ஒரு சிறு கதையாக எழுதுக.
2. ஆப்பிரிக்க நாட்டுப்படம் பார்த்து நைஜர் ஆற்றையும் மங்கோ பார்க் சென்ற இடங்களையும் குறித்து, அப்பகுதியைப் படமாக வரைக.

## இலக்கணம்

1. அரசன் × அரசி.—எதிர்ச்சொற்கள். இல்லை, அநாகரிகம், ஐயம், பெருமாட்டி, அருள்—இவற்றிற்கு எதிர்ச் சொற்கள் கூறுக.

2. வைத்தார், பார்க்க, கொடுக்கின்றனர், விளங்குகிறது, காட்டுகிறான்—இவற்றின் பகுதிகளை எடுத்து எழுதுக.

3. எந்நாட்டினர், நாட்டிற்குள், ஆணையிட்டு, பேரிரைச்சலிட்டு, அவரிடமிருந்த, அங்கெல்லாம், அங்ஙனமாயின்—இவற்றைப் பிரித்து எழுதுக.

4. பலன் + அளித்து, இரண்டு + அரை, இரைச்சல் + உடன், என்ன + என்று, அள்ளி + அள்ளி— இவற்றைச் சேர்த்து எழுதுக.

5. செடிக்கு தண்ணி ஊத்து.
பலகையை நேத்து ஒடைச்சான்.

இவ்வாறெல்லாம் சாதாரண மக்கள் பேசுவதைக் கேட்கிறோம். தண்ணீர், ஊற்று, நேற்று, உடைத்தான் என்னும் சொற்களையே அவர்கள் இவ்வாறு கூறுகின்றனர். இப்படிக் கூறுவது வழு (குற்றம்). ஆகையால் தண்ணி, ஊத்து, நேத்து, ஒடைச்சான் என்பவை வழூஉச் சொற்கள் ஆகும். படிக்கின்ற பிள்ளைகள் வழூஉச் சொற்களைப் பேசுதலும் எழுதுதலும் தவறு.

| வழூஉச் சொல் | திருத்தம் |
| --- | --- |
| அமக்களம் | அமர்க்களம் |
| ஆத்துக்கு | ஆற்றுக்கு |
| ஆச்சு | ஆயிற்று |
| இருக்கேன் | இருக்கிறேன் |
| ஒலகம் | உலகம் |
| கண்ணாலம் | கல்யாணம் |
| சிலவு | செலவு |
| சுவற்றில் | சுவரில் |
| எண்ணை | எண்ணெய் |
| நஞ்சை | நன்செய் |
| புஞ்சை | புன்செய் |
| சீக்காய் | சிகைக்காய் |
| பாவக்காய் | பாகற்காய் |

6. இவற்றைத் திருத்தி எழுதுக :—

அமிஞ்சி, இருக்குது, தவக்களை, திகட்டி, முளிச்சான், மொகனை, வெடிஞ்சதும், கோவிச்சிக்கினான்.

# செய்யுள்

## 1. கடவுள் வாழ்த்து

தனித்தனிமுக் கனிபிழிந்து வடித்தொன்ருக் கூட்டிச்
சர்க்கரையும் கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே
தனித்தநறுந் தேன்பெய்து பசும்பாலும் தெங்கின்
தனிப்பாலும் சேர்த்தொருதீம் பருப்பிடியும் விரவி
இனித்தநறு நெய்யளேந்தே இளஞ்சூட்டில் இறக்கி
எடுத்தசுவைக் கட்டியினும் இனித்திடும்தெள் ளமுதே
அநித்தமறத் திருப்பொதுவில் விளங்குநடத் தரசே
அடிமலர்க்கென் சொல்லணியாம் அலங்கல்அணிந்
தருளே.

—இராமலிங்க அடிகள்

இதை எழுதியவர் இராமலிங்க அடிகள். இவர் "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்னும் கொள்கையை உடையவர்; கடவுளை அருட்பெரும் ஜோதியாக, தனிப்பெருங் கருணையாக வழிபட்டவர். இவர் கி. பி. 19-ஆம் நூற்ருண்டினர். இவர் பாடிய பாக்கள் திருவருட்பா என்னும் பெயரால் வழங்குகின்றன.

அருஞ்சொற்பொருள்

முக்கனி - மா, பலா, வாழை. நறும் - மணமிக்க. தெங்கின் தனிப்பால் - தேங்காய்ப் பால். தீம் - இனிப்பான. இடி - தூள். விரவி - கலந்து. நெய் அளேந்து - நெய் வார்த்துப் பிசைந்து. தெள் - தெளிந்த. அலங்கல் - மாலே. அநித்தம் - நிலேயாமை. அற - நீங்க.

## 2. அறவுரை

### (1) நீதி வெண்பா

மாதா மரிக்கின், மகன்நாவின் நற்சுவைபோம்;
தாதா எனிற்கல்வி தானகலும்;—ஓதினுடன்
வந்தோன் மரித்துவிடில் வாகுவலி போம்; மனேயேல்
அந்தோ! இவையாவும் போம். (1)

பொன்னும் கரும்பும் புகழ்பாலும் சந்தனமும்
சின்னம் படவருத்தம் செய்தாலும் ;—முன்னிருந்த
நற்குணமே தோன்றும் ; நலிந்தாலும், உத்தமர்பால்
நற்குணமே தோன்றும் நயந்து. (2)

தீயவர்பால் கல்வி சிறந்தாலும் மற்றவரைத்
தூயவர்என் றெண்ணியே துன்னற்க;—சேயிழையே!
தண்ணொளிய மாணிக்கம் சர்ப்பம் தரித்தாலும்
நண்ணுவரோ மற்றதனை நாடு. (3)

வாக்குநயத் தாலன்றிக் கற்றவரை மற்றவரை
ஆக்கைநயத் தாலறியல் ஆகாதே ;—காக்கையொடு
நீலச் சிறுகுயிலை நீடிசையால் அன்றியே
கோலத் தறிவருமோ கூறு. (4)

தன்னை அளித்தாள், தமையன் மனை, குருவின்
பன்னி, அரசன் பெருந்தேவி,—தன்மனையைப்
பெற்றாள், இவர்ஐவர் பேசில் எவருக்கும்
நற்றாயர் என்றே நவில். (5)

—ஔவையார்

இவற்றைப் பாடிய ஔவையார் 200 ஆண்டுகட்கு முற்பட்டவர். இவர் வேறு ; சங்ககால ஔவையார் வேறு. இவருடைய பாக்கள் மிக எளிய சொற்கள் கொண்டவை ; அறநெறி ஊட்டுபவை.

அருஞ்சொற்பொருள்

1. மாதா - தாய். மரிக்கின் - இறந்தால். தாதா - தந்தை. அகலும் - போகும். ஓதின் - சொல்லப் போனால். உடன் வந்தோன் - சகோதரன். வாகுவலி - தோள் வலி. மனை - மனைவி.

2. சின்னம் பட - தன்மைமாறுபட. நலிந்தாலும் - வருந்தினாலும். நயந்து - சிறந்து.

3. தூயவர் - பரிசுத்தமானவர். துன்னற்க - நெருங்காதே. சேயிழையே - செம்மையான ஆபரணங்களை யணிந்தவளே. தண் ஒளிய-குளிர்ந்த ஒளியைத் தரும். நண்ணுவரோ-நெருங்குவரோ.

4. ஆக்கை நயத்தால் - உடலின் தன்மையால். நீடு + இசை = நீடிசை ; இனிமை மிக்க ஓசை. கோலம் - உருவம். அறி வருமோ - அறியக் கூடுமோ.

5. தன்னை அளித்தாள் - தன்னைப் பெற்ற தாய். பன்னி - மனைவி. பெருந்தேவி - அரசி. மனையைப் பெற்றாள் - மனைவியைப் பெற்றவள். நல் + தாயர் = நற்றாயர். நவில் - சொல்.

## (2) நாலடியார்

கல்வி கரையில ; கற்பவர் நாள்சில ;
மெல்ல நினைக்கின் பிணிபல ;—தெள்ளிதின்
ஆராய்ந்(து) அமைவுடைய கற்பவே ; நீரொழியப்
பாலுண் குருகின் தெரிந்து. (1)

வைப்புழிக் கோட்படா ; வாய்த்தீயின் கேடில்லை ;
மிக்க சிறப்பின் அரசர் செறின்வவ்வார் ;
எச்சம் எனஒருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற் றல்ல பிற. (2)

இம்மை பயக்குமால் ; ஈயக் குறைவின்றால் ;
தம்மை விளக்குமால் ; தாமுளராக் கேடின்றால் ;
எம்மை உலகத்தும் யாம்காணேம் கல்விபோல்
மம்மர் அறுக்கும் மருந்து. (3)

—சமண முனிவர்கள்

இது நான்கு அடிகள் கொண்ட 400 பாடல்கள் உள்ள நூல். இது கி. பி. 6-ஆம் நூற்றாண்டு நூல். இவற்றைப் பாடியவர்கள் சமண முனிவர்கள் என்று கூறப்படுகிறது.

### அருஞ்சொற்பொருள்

1. பிணி - நோய். தெள்ளிதின் - தெளிவாக. அமைவுடைய - பொருத்தமான நூல்களை. கற்ப - கற்பார்கள். நீர் ஒழியப் பால் உண்குருகின் - நீரை நீக்கிப் பாலை மட்டும் குடிக்கும் அன்னப் பறவையைப் போல்.

2. வைப்பு உழி - வைக்கப்பட்ட இடத்தில். கோட்படா - கவரப்படமாட்டா. வாய்த்து ஈயின் - கற்பிக்கும் வசதி கிடைத்துக் கற்பித்தால். கேடில்லை - குறைதல் இல்லை. செறின் - கோபித்தாலும். வவ்வார் - பறிக்கமாட்டார். எச்சம் என - தனக்குப் பின் எஞ்சியிருக்கும் பொருளாக. விச்சை - கல்விப் பொருள்.

3. இம்மை - இப்பிறப்புக்குரிய நன்மைகள். பயக்கும் - கொடுக்கும். தம்மை விளக்கும் - தம்மைப் புகழால் நெடுந் தொலை விளங்க வைக்கும். தாம் உளரா - தாங்கள் உயிர் உள்ள

வராக வாழும் அளவும். எம்மை உலகத்தும் - எந்த உலகத்திலும். மம்மர் - அறியாமையாகிய மயக்கம்.

## 3. பஞ்ச தந்திரக் கதைகள்

### (1) சிங்கத்தை முயல் வென்ற கதை

குறுமுயல் சிங்கந் தன்னைக்
கொன்றதொன் றுண்டே தென்னிற்
செறியுமோர் காட்டி லேயோர்
சிங்கமுண் டந்தக் காட்டில்
உறுவிலங் கனைத்தும் வேட்டை
யாடியூன் மிகவுந் தின்று
வெறிகொடு திரியும் நாளில்
விலங்கெலா மொருங்கு கூடி, (1)

ஆணிளஞ் சிங்க மே! உன்
அடவியில் விலங்கை யெல்லாம்
வீணிலே கொல்ல வேண்டா ;
விதத்தினிற் றினமொன் றாக
ஊணுனக் களிப்போம்,' என்ன,
உண்மையாக் கொண்டு சிங்கம்
ஆணையு மிட்டொவ் வொன்று
அருந்தியங் கிருக்கும் நாளில், (2)

தனிமுய லொன்றுக் கோர்நாள்
தன்முறை வருத லோடும்,
' இனியது விடாது நம்மை ;
எனினுமோர் எடுப்பெ டுத்து
வினையையிப் போது செய்து
வென்றுநாம் உய்ந்தோ மாகில்
நனிவிலங் கனைத்து முய்யும் ;
நமக்குநற் புகழுண்' டென்றே, (3)

கருதியச் சிங்கந் தன்னின்
கடும்பசி வேளை தப்பி
வருதலும் முயலை நோக்கி
மன்னன், 'நம் பசிவே ளைக்குப்
பெருமத வேழ மேனும்
பிந்துவ தில்லை ; பிந்தி
வருவதென் ? உரைநீ, என்று
மனந்தனிற் சினந்து கூற, (4)

' ஐய ! நின் பசிவே ளைக்கே
அடியனேன் வந்தேன் ; ஆங்கோர்
வெய்யசிங் கத்தைக் கண்டு
வெருவியங் கொளித்தி ருந்தேன் ;
பையவே சிங்க மாங்கோர்
பருமுழை புகுந்த பின்னர்த்
துய்யவுன் பக்கல் வந்தேன்
சுவாமி ! என் றிறைஞ்சி நிற்க, (5)

' சிங்கம்நா மல்லால் வேறோர்
சிங்கம்நீ கண்டா யாகில்
அங்கதைக் காட்டு வா,' என்
றழைத்தலும், அழைத்துப் போயோர்
பங்கமும் புனலும் சேர்ந்த
பாழ்ந்துர வதனைக் காட்ட,
அங்கதை யெட்டிப் பார்த்த(து) ;
அதனிழ லுருவந் தோன்ற, (6)

தன்னுரு நிழலைத் தானே
சத்துரு வென்று பாய்ந்து
துன்னுபங் கத்த முந்தித்
துலங்கியே யுயிரி ழந்த

தென்னலால், உபாயத் தாலே
யாவையும் வெல்ல லாமென்
றின்னமோர் நண்டு கொக்கை
ஈர்ந்ததோர் கதையுஞ் சொல்லும். (7)

பஞ்சதந்திரம் — ஐந்து தந்திரங்கள். இந்நூலில் உள்ள கதைகள் கதைக்குள் கதையாக அமைந்துள்ளன. அவை அரச குமாரருக்கு அறிவுறுத்தக் கூறிய கதைகள். இந்நூல் வட மொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது. இதைத் தமிழில் செய்யுளாகப் பாடியவர் வீரமார்த்தாண்ட தேவர்.

ஐந்து தந்திரங்கள் அல்லது உபாயங்கள் என்பன பஞ்ச தந்திரம் எனப்படும். அவை, (1) நட்புப் பிரித்தல், (2) நட்புப் பெறுதல், (3) அடுத்துக் கெடுத்தல், (4) பொருளழிவு, (5) ஆராயாது செய்தல் என்பன.

அருஞ்சொற்பொருள்

1. குறுமுயல் - சிறுமுயல். செறியும் - மரங்கள் அடர்ந்த. உறு - பொருந்திய. ஊன் - இறைச்சி. கொடு - கொண்டு.

2. ஊண் - உணவு.

3. உய்ந்தோம் - பிழைத்தோம். நனி - அதிகமான. உய்யும் - பிழைக்கும்.

4. வேழம் - யானை.

5. வெய்ய - கொடிய. வெருவி - பயந்து. பைய - மெதுவாக. பருமுழை - பெரியகுகை. துய்ய - பரிசுத்தமான. இறைஞ்சி - தொழுது.

6. பங்கம் - சேறு. புனல் - நீர். பாழ்ந்துரவு - பாழ்பட்ட கிணறு.

7. சத்துரு - பகைச் சிங்கம். துன்னு - பொருந்திய. துளங்கி - வருந்தி. ஈர்ந்தது - துண்டித்தது.

## (2) குரங்கு பழிவாங்கிய கதை

தவமிகு மயோத்தி யாளுஞ் சந்திர சேனன் றன்சேய்
கவிகளி னுடல் காணுங் கருத்தறிந் தொருசா லைக்கண்
சவிபெறு குறங்க நேகந் தான்வளர்த் திடுமந் நாளில்
புவிபுக ழரச னேவல் புரிபவர் சண்டை யிட்டார். (1)

ஒருகுரங் கதுகேட் டுத்தன்
　　உறவினர்க் குரைக்கும் : "இப்போர்
பெருகுறில் தீதாம், மற்றோர்
　　வனத்தில்நாம் பெயர்வோம்," என்ன
உரைசெயக் "கிழநின் சொற்கேட்
　　டுண்பதை யறேம்"என் றேவா
னரமெலாம் இகழ்ந்து பேச,
　　நடுங்கியங் கவரை விட்டே, (2)

தன்குடும் பத்தி னோடோர்
　　கானிடை சார்ந்த தப்பால்,
பின்பொரு நாளச் சண்டை
　　பெரிதுற, அவரி லேயோர்
வன்பினன் கொள்ளிக் கட்டை
　　மற்றவன் மேலே வீச,
முன்புறு குதிரைச் சாலை
　　மேலது மூண்ட தன்றே. (3)

சாலையு மெரிய வாசி
　　தாஞ்சில விறந்த ; எண்ணில்
கோலவெம் புரவி தீயிற்
　　கொண்டன காயம் ; மன்னன்
பாலடைந் ததனைக் காப்போர்
　　பகர்தலும் அந்நோய் தீர்க்கும்
சீலனை யழைத்து மாக்கள்
　　தீயினோய் நீக்கு கென்றான். (4)

மருத்துவன், 'குரங்கு நெய்யால்
　　அன்றிநோய் மாயா' தென்றான் ;
செருத்தொழி லிறைவன் ; 'சாலை
　　சேர்ந்துள குரங்கை யெல்லாம்

வருத்தியந் நெய்யைக் கொண்டு
வாசிநோய் வாசி யாக்' கென்
றுரைத்தனன். அவ்வா றேநோய்
ஒழித்தனர் மருத்து நூலோர். (5)

"இப்பழி யிறையி டத்தே
வாங்குவேன் !" என்று முன்போய்த்
தப்பிய கிழக்கு ரங்கு
தன்மனம் பதைத்தே யெண்ணி
ஒப்பிலாப் பெருங்கா னத்தி
லொருகுள மிருக்கக் கண்டு
வெப்புறு பேயொன் றிங்கு
மேவவே வேண்டு மென்றே. (6)

எண்ணியக் குளத்திற் கஞ்சத்
தாளினு லிருநீ ருண்ண
நண்ணிய பேய்கண் டங்கு
நணுகி, "நின் பெருமை கண்டுன்
கண்ணெதிர்ப் பட்டேன்," என்று
கழுத்துறு மாலை தன்னைத்
துண்ணென வெடுத்து நல்க,
வாங்கியே சொலுங்கு ரங்கே: (7)

"எவ்வள விந்த நீரி
னுனக்குள வலிமை ?" என்னச்
"செவ்வியோய்! இந்த நீரி
லாயிரம் பேர்சேர்ந் தாலும்
கைவலித் துண்டற் கான
சத்தியென் கண்ணுண் "டென்ன
"இவ்விடம் புசிப்பு னக்கே
யான்கொடு வருவன்," என்றே, (8)

மாலையைக் கழுத்திற் பூண்டு
வானர மகன்று வேந்தன்
பாலடைந் திடவ வன்றான்
பார்த்'' திந்த மணியின் மாலை
சீலனே ! எங்குச் சம்பா
தித்தனை ?'' எனக் குரங்கு,
'' கோலமா ரொருகா னத்திற்
குளந்தானொன் றுளது மன்னா ! (9)

'' அக்குளந் தன்னிற் காலை
அடைந்துமுன் குதிப்போர்க் கெல்லாம்
இக்கதிர் மணிக ளெய்தும்,''
எனச்சொல, '' யானு மெய்தித்
திக்கொளி விரிக்குஞ் சோதிச்
செழுமணி பெறுவேன் !'' என்று
புக்கவக் குரங்கி னோடும்
போயினன் சேனை சூழ. (10)

போனபின், '' இதுவே காலம் ;
புகுந்தநின் சேனை யெல்லாம்
கானவிர் மலர்த்த டத்திற்
களிப்பொடு குதித்துத் தங்கட்
கானநன் மணிகள் கொண்ட
பின்னரே யரச ! நீயும்
நானுமொண் மணிகள் கொள்வோம்,''
என்றதந் நாகந் தானே. (11)

'' அப்படி யாக,'' என்றே
யரசனுஞ் சேனை யோரைக்
' குப்புறு ' கென்ன வோதக்
குதித்தலும் மவரைப் பற்றித்

துப்புறு பூதந் தானும்
தொடர்ந்திழுத் துண்ட தங்கே ;
தப்புறு வேந்தன் தானுந்
தடத்திடைக் காத்தி ருந்தான். (12)

நெடும்பொழு தங்குக் காத்தும்
நீரிடைக் குதித்த சேனை
அடங்கலும் வராமை கண்டே
யரசனக் குரங்கை நோக்கித்
" தடந்தனிற் குதித்த சேனை
சார்ந்தில தென்னே ?" என்றான்
நடந்தொரு மரத்தின் கொம்பி
னுகமுன் னேறிச் சொல்லும் : (13)

" கொழிபுகழ் வேந்த னே ! எங்
குலத்தையெல் லாநீ கொன்ற
பழிதனை வாங்க வந்தேன் ;
முடித்தனன் ; பண்டு நின்சோ
றழிபசிக் குண்டே னுத லானுனை
விடுத்தேன் " என்று
மொழிதர, இரங்கி வேந்தன்
முந்துதன் னகர்புக் கானே. (14)

அருஞ்சொற்பொருள்

1. சேய் - மகன். கவி - குரங்கு. புவி - பூமி.
2. அரோம் - விடோம்.
3. கான் - காடு. உற - பொருந்த. வன்பினன் - கொடியவன்.
4. வாசி - குதிரை. கோலம் - அழகு. பகர்தலும் - சொல்லலும். சீலன் - வைத்தியன்.
5. செரு - போர். வாசியாக்கு - குணப்படுத்து. மருத்து நூல் - வைத்திய நூல்.
6. இறை - அரசன். வெப்புஉறு - கொடுமை பொருந்திய.

7. கஞ்சம் - தாமரை. தாள் - தண்டு. இருநீர் - மிகுந்தநீர். நணுகி - நெருங்கி. துண்ணென - விரைவாக.

8. செவ்வியோய் - குணவானே. என்கண் - என்னிடம். வலித்து - இழுத்து. புசிப்பு - உணவு.

9. வேந்தன்பால் - அரசனிடம். கோலம் - அழகு. ஆர் - பொருந்திய.

10. கதிர் - ஒளி. எய்தி - அடைந்து. புக்க - தன்னைவந் தடைந்த.

11. தடம் - குளம். ஒள் - ஒளிபொருந்திய. நாகம் - குரங்கு.

12. குப்புறுக - நீரில் மூழ்குக. துப்பு - வலிமை. உறு - பொருந்திய. தப்புஉறு - குற்றம் பொருந்திய.

13. சார்ந்திலது - வெளி வரவில்லை.

14. கொழி புகழ் - மிக்க புகழ். அழிபசி - மிக்கபசி. மொழி தர - சொல்ல. இரங்கி - தன் செயலுக்கு வருத்தமடைந்து.

## 4. தொழில்

இரும்பைக் காய்ச்சி உருக்கிடு வீரே
இயந்தி ரங்கள் வகுத்திடு வீரே
கரும்பைச் சாறு பிழிந்திடு வீரே
கடலில் மூழ்கிநன் முத்தெடுப் பீரே
அரும்பும் வேர்வை உதிர்த்துப் புவிமேல்
ஆயி ரந்தொழில் செய்திடு வீரே
பெரும்பு கழ்நுமக் கேயிசைக் கின்றேன்
பிரம தேவன் கலையிங்கு நீரே.

—சி. சுப்பிரமணிய பாரதியார்

இதனை இயற்றியவர் தேசியகவி—சி. சுப்பிரமணிய பாரதி யார். இவர் 30 ஆண்டுகட்குமுன் வாழ்ந்தார். இவர் கவிகள் நாட்டுப் பற்று, தாய்மொழிப் பற்று, உரிமை உணர்ச்சி முதலி யவை நிரம்பியன.

அருஞ்சொற்பொருள்

வகுத்திடுவீர் - அமைத்திடுவிர். அரும்பும் - உண்டாகிற. புவி - உலகம். இசைக்கின்றேன் - சொல்லுகின்றேன்.

## 5. புனைந்துரை

### எண்ணமும்—பலனும்

' இருளும் அகலும் இரவியும் தோன்றும் ;
பொருவில்இத் தாமரைப் பூவும் மலரும் ;
மலரும் பொழுதிவ் வன்சிறை நீங்கி,
உலகில் எங்கும் உலவித் திரிந்து,
பூவெழு பற்பல புதுவனங் கண்டு,
நாவெழு சுவைதரு நறைமிக உண்டு
வாழ்குவன் ' என்றொரு மதுகரம் இருப்பத்
தாழ்மத வேழமொன் ருழ்கயம் இறங்கிப்
பாசிலைப் பூவெலாம் பறித்து
வீசி எறிந்து வெறிகொண் டதுவே.

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

இதன் ஆசிரியர் இப்பொழுது வாழ்பவர் ; தேரூர் என்னும் சிற்றூரினர். இவர் பல ஆண்டுகள் ஆசிரியராக இருந்தவர் ; ஆங்கிலமும், தமிழும் நன்கு கற்றவர். மாலைக் காலத்தில் குவிந்த ஒரு தாமரைப் பூவிற்குள் அகப்பட்டுக்கொண்ட ஒரு வண்டின் எண்ணமும், முடிவில் அதன் பலனும் இக்கவிதையில் அழகுபடக் கூறப்பட்டிருக்கின்றன.

அருஞ்சொற்பொருள்

புனைந்துரை - வருணனை. அகலும் - நீங்கும். இரவி - கதிரவன். பொருவில் - ஒப்பில்லாத. வன் - வலிய. சிறை - சிறைச்சாலை. பூஎழு - பூக்கள் உண்டாகும். வனம் - தோட்டம். நறை - தேன். மதுகரம் - வண்டு. வேழம் - யானை. ஆழ் - ஆழமான. கயம் - குளம். பாசிலை = பசுமை + இலை - பச்சிலை.

## 6. பலசுவை

### சிவனுக்கும் தேங்காய்க்கும் சிலேடை

கல்லா லடியுறலால் கண்மூன் றிருப்பதனுல்
எல்லோரும் பூசைக் கெடுத்திடலால்—வல்லோடு
கொள்ளுகையால் கங்கா குலமுத்து சாமிமன்ன
கள்ளிதழி யானிகர்தேங் காய். (1)

—அழகிய சொக்கநாத பிள்ளை

### பாம்புக்கும் எள்ளுக்கும் சிலேடை

ஆடிக் குடத்தடையும் ஆடும்போ தேயிரையும்
மூடித் திறக்கின் முகங்காட்டும்—ஓடி மண்டை
பற்றில் பரபரெனும் பாரில்பிண் ணாக்குமுண்டாம்
உற்றிடும்பாம் பெள்ளெனவே ஓது. (2)

### வைக்கோலுக்கும் யானைக்கும் சிலேடை

வாரிக் களத்தடிக்கும் வந்துபின்பு கோட்டைபுகும்
போரிற் சிறந்து பொலிவாகும்—சீருற்ற
செக்கோல மேனித் திருமலைரா யன்வரையில்
வைக்கோலு மால்யானை யாம். (3)

—காளமேகப் புலவர்

### கட்டுச்சோற்றைப் பறிகொடுத்த நிலை

சீராடை அற்றிடும் வைரவன்
வாகனம் சேரவந்து
பாராரும் நான்முகன் வாகனம்
தன்னைமுன் பற்றிக் கௌவி
நாரா யணனுயர் வாகனம்
ஆயிற்று ; நம்மைமுகம்
பாரான்மை வாகனன் வந்தே
வயிற்றினில் பற்றினனே. (4)

—அந்தகக்கவி வீரராகவ முதலியார்

இரு பொருள்படச் சொற்களைச் செய்யுட்களில் தொடுத்துப் பாடுவதற்குச் சிலேடைப் பாட்டு என்பது பெயர்.

1. இதை எழுதிய அழகிய சொக்தநாத பிள்ளை திருநெல் வேலியில் பிறந்தவர்; இராசவல்லிபுரம் முத்துசாமிப் பிள்ளை என்பவரால் ஆதரிக்கப் பெற்றவர். இவர் 65 ஆண்டுகளுக்கு முன் இருந்தவர்.

2, 3 இவ்விருபாடல்களையும் எழுதிய காளமேகப் புலவர் கும்பகோணத்திற் கருகிலுள்ள நந்தி கிராமத்தில் பிறந்தவர் ; 400 ஆண்டுகட்கு முற்பட்டவர் ; பல வேடிக்கைப் பாடல்களைப் பாடியுள்ளார்.

4. அந்தகக்கவி வீரராகவ முதலியார் தொண்டைநாட்டுக் கவிஞர் ; 17-ஆம் நூற்றாண்டினர்.

## அருஞ்சொற்பொருள்

1. சிவனுக்கு :—கல்லாலடி - கல்லால மரத்தின்கீழ். வல் ஒடு - பிரமனுடைய வலிய மண்டை ஓடு.

தேங்காய்க்கு :—கல்லாலடியுறல் - கல்லில் அடித்து உடைக்கப்படுதல். வல்லோடு - வலிமையான மேல் ஓடு.

கங்கா குலம் - வேளாளர் குலம். இதழியான் - கொன்றை மாலையுடைய சிவன். நிகர் - ஒப்பாகும்.

2. பாம்பு :—ஆடி-படம் எடுத்தாடி. இரையும் - ஒலிக்கும். ஓடி மண்டைபற்றிப் பரபரெனும் (கடித்தால் அதன் நஞ்சானது) மண்டையில் ஓடிப்பற்றி பரபர என்னும் நமைச்சல் உண்டாகும். பிள் நாக்கும் உண்டாம் - (அதற்கு இரண்டாகப்) பிளவு பெற்ற நாக்கும் இருக்கும்.

எள் :—மூடித் திறக்கின் - (அதன் சாரமாகிய எண்ணெயைக் குடத்தில் ஊற்றி) மூடிவைத்து அதன் நுரை அடங்கிய பின் திறந்து பார்த்தால், முகம் காட்டும் - (பார்ப்பவரின்) முகம் எண்ணெயில் தெரியும்.

3. வைக்கோல் :—வாரிக் களத்தடிக்கும் - வயலிலிருந்து எடுக்கப்பட்டு நெற்களத்தில் போட்டுத் துவைக்கப்படும். கோட்டைபுகும் - (புரியாகத் திரிக்கப்பட்டு நெல், கோட்டையைச் சூழ்ந்திருக்கும். போரிற் சிறந்து பொலிவாகும் - பெரிய குவியலாக மலை போலக் குவிக்கப்பட்டு உயர்ந்து விளங்கும்.

யானை :—களத்து - போர்க் களத்தில். வாரியடிக்கும் - (எதிரிகளின்) சேனைகளைத் தாக்கிச் செல்லும். கோட்டை புகும் - போர் முடிந்தபின் அரசன் கோட்டைக்குள் செல்லும். போரில் - சண்டை செய்வதில். சிறந்து - மற்றப் படைகளைப் பார்க்கிலும் மேம்பட்டு. பொலிவாகும் - நன்கு விளங்கும். சீர் உற்ற - புகழ் பொருந்திய. செக்கோல - சிவந்து அழகிய.

4. ஆடை - துணி. வைரவன் - பைரவ மூர்த்தி. வைரவன் வாகனம் - நாய். நான்முகன் வாகனம் - அன்னம். அன்னம் - சோறு. நாராயணன் வாகனம் - பருந்து. பருந்து ஆயிற்று - பருந்துபோல் பறந்து போயிற்று. மை - ஆடு. மைவாகனன் - அக்கினி ; நெருப்பு. நெருப்பு - பசி நெருப்பு ; மிக்க பசி.

---

# PODIGAI VACHAKAM

FOR

FORM I—PART II

BY

VIDWAN N. ARUMUGHAM
&
VIDWAN S. RAMALINGHAM

REVISED AND EDITED BY

PANDITHA VIDWAN L. P. Kr. RAMANATHAN CHETTIAR
*Professor of Tamil,*
*Annamalai University, Annamalai Nagar.*

VELLAYAN PUBLISHING HOUSE

KANDANUR, RAMANATHAPURAM DIST.



[*Price* As. 12